

ஸ்ரீலலிதாதேவி மகான்மியக்

# கீர்த்தனங்கள்

பிரம்மஸ்ரீ நீலகண்டதாஸர்
அவர்கள் இயற்றியது

Santha

ஸ்ரீலலிதாதேவி மகான்மியக்

# கீர்த்தனங்கள்



பிரம்மஸ்ரீ நீலகண்டதாஸர்

சிவமயம்

ஸ்ரீ லளிதாம்பிகாயை நம:

# ஸ்ரீ லளிதாதேவி மகான்மியக்

# கீர்த்தனங்கள்



### மகாகணபதி காப்பு

விருத்தம்

உலகெலாமீன்றளிக்கு முமையவளும்பர்வேண்ட
விலையிலா மணிப்பூணேந்தி வேள்விமாவனலிற்ரேன்றித்
தொலைவிலாவசுரர்வாழ்வைத் தொலைத்ததோர் லளிதை மாண்மியம்
மலைவிலாதுரைக்கமுக்கண் மதயிபமுகன் காப்பாமே

கீர்த்தனம். இராகம் நாட்டைக்குறிஞ்சி. தாளம்—ஆதி

பல்லவி

விநாயகா துணைசெய். தருள்சித்தி
விநாயகா துணைசெய்.

அனுபல்லவி

தனுஜிபதிசுர ஜனுதிபதிதொழு
மனுதிபதிமகா கணுதிபதியான விநாயகா

சரணங்கள்

தீரா பரசிவகுமாரா கஜமுககம்பீரா பருந்துதிக்கை
வீரா விக்னமகற்றும்ஸாரா தொழுவோர்க்குப
காராஸகலவரோதாரா கஜாசுரஸம்ஹாரகருணாகர-
விநாயகா

வேதா வுமைபாலாவிநோதா எவருந்தொழும்
பாதா பாவனைகணநாதா ஏகதந்தப்ரஸிதா இடரொழித்
தாள்
போதா கவிக்குனருள்தாதா சரணமெனக்-
காதரவாயென்றைக் கும் விநாயகா

அண்டர் முனிவர் துதிகொண்ட பெருமைபெறு
சண்ட ப்ரசண்டநீண்ட சுண்டாயுதமதநீ
ருண்ட ளிபாடி மொய்த்துக்கொண்ட மஸ்தகநீல
கண்டதாஸன்கவிக்கு மண்டலம்புகழ்ந்திடும். விநாயகா

—0—

## குருவந்தனம்

விருத்தம்

மங்கலமறையினுண்மை மகிழ்ந்துரைத்தொரு நால்வர்க்
குச்
செங் கதிரவனையொத்துச் சிறந்தவாலடியிற்றங்கி
எங்கணுநிறைந்தவொன்றை யிருந்தவாறிருந்து காட்
டிச்
சங்கைதீர்த்தருளிநின்ற சற்குருபாதம்போற்றி

கீர்த்தனம்: இராகம் கமாசி. தாளம்-ஆதி.

பல்லவி

குருபரனேயெனக் கருள்தயாநிதியே
கோதிலகுணநதியே

அனுபல்லவி

அருமறைப்பொருளருள் தரும்ஞானபூர்ணசந்திரா
அறுபத்துநாற்கலையும் பெறுவித்தமகாமந்திர- குருபர:

சரணங்கள்

அஞ்ஞானமாகிய பொய்க்கானிற்றிரிந்திடும்
அந்தரைக்கைதூக்கி யானந்தவீடளித்திடும் குருபர:

பாழ்வினை சூழ்ந்தபொய் வாழ்வினில் மயங்கிடும்
பாமுலகம்பொருந்து மேழையர்க்கிரங்கிடும் குருபர

எளியர்தமக்குஞான வெளியை விளக்கவந்த
இதயங்கனிந்தபோத மதியே பரமானந்த குருபர

அண்டமனைத்தும்புகழ் கொண்டக்ருபாகர
அண்டினோர்க்கருள்நீல கண்ட-சராசர. குருபர

ஸரஸ்வதி வந்தனம்

பண் விருத்தம்

திங்களொத்த வதனமுந் திகழ்ந்தபுன் சிரிப்பொடுஞ்
செங்கைதங்கு வீணையுஞ் செபிக்குமக்கமாலையும்
கொங்கையிற்கலங்களுங் குளிர்ந்தநல்ல நோக்கு
மாய்ப்
பங்கயத்தமர்ந்தபாவை பதமிறஞ்சிவாழ்த்துவாம்.

கீர்த்தனம். இராகம் சங்கராபரணம். தாளம்—ஆதி

பல்லவி

வாவா கலைமாதே-யெனக்கருள்-தாவாயிப்போதே

அனுபல்லவி

தேவர்முனிவர்முதல் யாவரும்தொழும் பர-
தேவிஸகலகலா ரூபிநன்மொழிதர. வாவா

சரணம்

இராகதாளசேர்கையோடுநற்பத
ராசிவாரி ராசிமாலையொப்பென
வேகுதித்தப்ராஸமோடு சொற்பொருள்
மேவிசையெதுகைமோனையும்

பாகையொத்தயோக முற்றநவரஸ
பாவிலக்கிய லக்கணம்பொருத்தமு-
மாகமுத்துக்கோர்வை யென்னவர கவி
யானதென்றன் நாவில்வந்துதோன்றிட வாவா

## ஸுப்பிரமணிய வந்தனம்

விருத்தம்

அரவணியும் பெருமா னருள்மகனே சிவனுக்
கொருகுருவானவனே யுமையவள் பாலகனே
சரவணையிற்றோன்றும் ஷண்முகனே கருணைத்
திருவுருவாயநினைச் சிந்தனை செய்குவனே.

கீர்த்தனம். இராகம். கேதாரம் தாளம்-சாய்ப்பு

பல்லவி

சரவணபவசிவானந்த நல்ல
தருணமிதுகருணை புரிகுவாய்கந்தா.

அனுபல்லவி

திருவருளுலகெலாஞ் சிறந்தவேல்முருகா
தேவஸேனாதிபா செங்கண்மால் மருகா —சரவண

சரணம்

வேதனைச்சிறையிட்ட விமலமெய்ப்போதா
மெய்ப்பொருள் விரித்த வேதாஸாமிநாதா
மாதவர்க்கருள்மாரி பொழியும் ப்ரஸாதா
வானவர்முனிவர் வணங்கும் பொற்பாதா
மாதுமைக்கருமைக்குமாரா மாயதுட்டரைமாய்க்கும் வீரா
நீதமாதிருவோர்சிங்காரா நீலகண்டனடியேனுக்கு
ப்கார — சரவண

## பரமசிவ ஸ்தோத்திரம்

விருத்தம்

சசியணிமகுடம்பூண்டு தன்னிடப்பாகமாயோர்
பசியபொற்பாவையோடும் பங்கயாதனத்திருந்து
திசைமுகன்மாலும்வானோர் திசையுளாரெவரும்போற்ற
இசைவுறளவிங்குமீச னிணையடி வணங்குவேனே.

கீர்த்தனம். இராகம்-தோடி. தாளம்-ரூபகசாய்ப்பு,

பல்லவி

ஹரஹரசம்போ சங்கரவருள்புரிவாயே
ஹரவருள்புரிவாயே-ஹரவருள்புரிவாயே.

அனுபல்லவி

புரஹரபாதிமதி தரஸுரமுனிவர் தொழும்- ஹரஹர

சரணங்கள்

அழகியசீர்பாதா பழவடியார் போதா-
முழுமறை புகழ்நாதா-தொழுமவர்க்கருள் தாதா. ஹரஹர

கலைமதிப்புனல்சூடி நலமிகுமறைபாடி
மலைமகளுறவாடி பலவுயிர்க்குளுமாடி ஹரஹர

காலனையும்வென்றதூயா-தோலையுமணிந்தநேயா
ஆலமதுமுண்டவாயா நீலகண்டாவென்ஸகாயா
ஹரஹர



## உமாதேவி ஸ்தோத்திரம்

விருத்தம்

ஆதிபரன்மாது வடிவாயுலகனைத்தும்
நீதிபெறவீன்றருளு நின்கருணையதனால்

ஆதரவுசெய்வ தழகென்னவனையுமையுன்
பாதமலர்தொழுது பரமென்றுபணிவேனே.

கீர்த்தனம். இராகம்-சகன தாளம்-ரூபகம்

பல்லவி

கருணைசெய்வையே அம்மாநின்
கருணைசெய்வையே.

அனுபல்லவி

அருமறைநான்கும் பெரும்புகழோங்கும்
பொருளெமெய்தாங்கும் திருவருள் தேங்கும்
பரயேதிருவடிபோற்றி யிருவினைநோயெதுமாற்றி
சரண்பெறுதொண்டர் முன்றேற்றி யருளுமையேயெ
ணையாற்றி கருணை

சரணங்கள்

ஊழ்வினையினுலுடம்பைக்கொண்டாடிப்
பாழ்விதியினுலலைந்து திண்டாடிக்
கேழ்வியில்லாதார்போல் மனம்வாடி பாவியரைக்கூடி
நோவுறுநோய்பிணிதூக்கி யாவியிழந்துவீணுக்கிப்-
போவர்தமுறவினைநீக்கித் தேவிநின்றிருவருளுக்கிக்-
கருணை

அஞ்சிமனமில்லாமையாற்சென்றே
கெஞ்சியன்பிலார்முன் வீணுய்நின்றே.
வஞ்சியரின்பம்மிகவும்நன்றென்றே சஞ்சலங்
கொண்டே
அஞ்சனவிருளெனும்மோக வெஞ்சிறைசென்றவிவேக
வஞ்சனையாற்பெறுஞ்சோக ஸஞ்சயம்வாராதாகக்-
கருணை

ஆதியந்தமில்லாதசிவையே
ஓதிமுனிவர்புகழும் பரையே.
பூதிதிகழ்ந்தவமுயாரணையே கோதிலாமணியே.
பாதிமதிச்சடைகொண்ட சோதியெனுநீலகண்டர்
மீதொருபாதியிற்பெண்டா மாதியே நீ-கதிகண்டாய்
கருணை

—0—

## நாரண நான்முகவந்தனம்

விருத்தம்

ஆரணங்கவர்ந்தபாவி யாவியையுண்டுமீண்ட
காரணன்கமலநேத்ரன் கருமுகிலணையமேனி
நாரணன்ருனுமன்னேன் நாபியிற்ருேன்றிவந்த
பூரணவுலகீன்ருேனும் பூமாதுந்துணைசெய்வாரே.

### காமேசர் காமேசி வந்தனம்

பூமேவுமயன்மால் புரந்தராதிகளும்
மாமேவுவாணி சசியாதிமாதர்களும்
பாமேவுமறையா திகலைகளும் பணியும்
காமேசர்காமாசி கழலிணைகள் தொழுவாம்

---

### அவையடக்கம்

விருத்தம்

மண்ணில்மாபாவமெல்லாம் மாற்றிடும் புனிதகங்கைத்-
தண்ணில் வேறொருநீர்பாயத் தாங்கல்போற்சரிதை யிதும்
புண்ணியநல்லோர்காதிற் பூந்திடும் புலவோர்குற்ற.
மெண்ணிடாரிளஞ்சேயின்சொல் லென்பராமெனவி சைத்தேன்.

---

### நூல் வரலாறு

விருத்தம்

முன்னநாளகஸ்தியர்க்கு முழுதுணர்ந்தயக்கிரீவர்
சொன்னதாய்முனிவர்க்கெல்லாஞ் சூதருமுரைத்த தாக
மன்னுசீர்வடமொழிப்ரம் மாண்டமாகியபுராணந்
தன்னினின்றெடுத்திக்காதை தமிழினிற் பாடலுற் றேன்.

---

### சரித்திரப் பயன்

கீர்த்தனம். இராகம்-எமுனா கல்யாணி. தாளம் ஆதி

பல்லவி

லளிதா கதைகேட் டுணர்வார்க் கிகமும்
எளிதாய்ப் பரமும் பெறலாமே.

அநுபல்லவி

ஒளிசேர் கனகா சலவா ஸினியாம்
அளிசேர் குழல்மான் விழிசாம் பாவியாம். லளிதா

சரணங்கள்

பெரிதா யசகத் துயிர்பே றுற்றும்
சரியா தமுலைத் தாய்காண் முற்றும்
அரிதா யடியா ரறிவா ரலதார்
தெரிவார் சிவனுக் குரியாள் பெருமை- லளிதா

மதியின் னிலவாய் மலரின் மணமாய்
சுர்தியின் பொருளா யமுதின் சுவையாய்
பதியோ டுறையும் பரமாயருளும்
கதியா யசிவச் சுடர்மெய் யொளிவாம்- லளிதா

இதனைக் கேட்டா லோடும் பேய்கள்
பதறிச் சாடிப் போமே நோய்கள்
சுதரைப் பெறுவார் சுகமாய் வாழ்வார்
பதியும் க்ஷேமம் பெறுமாதலினால். லளிதா



**மங்களம்**

இராகம் ஸவுராஷ்ட்ரம் தாளம்-ஆதி

ஸ்ரீராஜராஜேசுவரி சிவகாமேச சுந்தரிநாராயணஸோதரி
நன்மை சிறந் ட நல்குவாய் மங்களம்

வேதவிலாஸினி முன் விண்ணோர் வேழ்வியில் வந்த
ஜோதிலளிதேசுவரி துரிதமகன்றிடவருளுவாய் மங்களம்

பண்டாசூரனை வென்று பரமகருணைகொண்டு
அண்டர்களைப் பாலித்த வம்பிகே யெங்களுக்கீந்தருள்
மங்களம்

மூலாதாரமுக்கோணம் முதலாயிரத்தின் மேலும்
லீலைசெய்தாளுநீலகண்ட குடும்பினிநீயருள் மங்களம்.

—0—

## மகாகணபதி ஸ்தோத்திரம்

அண்டர் கட்கபயம்நல்கி அசுரர் சூழதிக மாயா
பண்டதானவனைவென்ற பராபரை சரிதையீதும்
தண்டமிழ்ப்பதங்கள் தந்து தடைவுறக்கதிநடத்தத்
தொண்டன்முன்றுலங்குஞ்சித்தித் துதிக்கையானைத்
துதிப்பேன்

## சரித்திரத் துவக்கம்

எழுசீர் விருத்தம்

மதிநதியணிந்தபரன் மலரடிமனங்கருது
மாதவவகஸ்தயமுனிவன்
மண்மிசைநடந்துநெடு மலைவிபினநகர்களும்
மருவியங்குள்ளபுனித
நதிகள் முதலானவெகு தீர்த்தங்களாடுநா
ணலமின்றி மனிதரெல்லாம்
நமனுலகுசெலுமான நடைகண்டிரக்கமொடு
நரர்கள்கதியுய்யும்வண்ணம்
துதிமருவுகாஞ்சிப் போய்ச் சூதவடியிற்றங்கு
துரியவாடிவானசிவனைத்-
தொழுது சிலதினமங்கு தூய்முனிதவம் புரிவ
தோர்த்தரிதொலங்கிநிற்கப்-
பதமலர்வணங்கியுலகிதுபமணர்ந்திடும்
படியருள்கவெனவேண்டலும்
பலகலையுணர்ந்த திருவருளுடைய வொளிர்சக்ர
பாணியுமவர்க்குரைப்பார்.

கீர்த்தனம். இராகம்-பைரவி. தாளம்-ஆதி.

பல்லவி

உலகிற் பாமரரெல்லாமெளிதில் முத்தியடைய
வொருவழிசொல்லக்கேளாய்-அகஸ்தயா
ஒருவழிசொல்லக்கேளாய்

அனுபல்லவி

தொலையாப்பிறவியோட்ட நலமாய் நீயெனைக்கேட்ட
துறையிதுநன் றுநன்று மறைமுனியேநானின்று
உலகிற்

சரணம்

ஆதியிற்சிவனெனக் கோதிய்வுபதேச
மயனுக்குநான்பின்சொல்ல எவருங்கொண்ட
விசுவாஸம்
மாதவன்-துர்வாசுங் கேட்டாதரவான்நேசம்
மண்ணிலெவர்க்குஞ்சொல்லிமாற்றுவாய்ப்வபாசம்
நீதமாயிதுவே நிலைபெறுமுண்மை
ஆதலாலெவருமறிந்திடல் நன்மை
பேதமாமுனியே புவனங்கட்கம்மை
பாதமேதொழுதல் பரகதிச்செம்மை உலகிற்

விருத்தம்

சித்தியும் முத்திதானுஞ் சிறந்திடவேண்டிலாதி
சத்தியேயுணர்ந்துபோற்றின் ஸாதிக்குமென முகுந்தன்
பத்திரமாய் மொழிந்து பராபரை பெருமையெல்லாம்
நற்றவமுனிக்குப்பின்னும் நாரணன் கூறுவாரே.

கண்ணிகள். இராகம் பியாக் • தாளம் ஆதி

சங்கமுஞ் சக்ரமுமக்கமாலையுந்
தாங்குபுஸ்தகமோடுஞ்சனார்த்தனன்
மங்களவடிவாய குணாதீதன்
மனமு வந்து மறைமுனியேபரா
சத்திதன்னைச்சிவனுமோர் பங்குற்றான்
சதுமுகன்மற்றும் பூசித்தருள் பெற்றார்.
சித்திமுத்தியுலகுக்குணர்வதுந்
தேவிதன்றிருவருளின் பெருமையாம்
ஆதியான பொருளீதொருவர்க்கு
மறியவொண்ணர்வதிசூட்சுமமானது
போதமுற்றாலெவராயினும்பாவம்
பூணார்பாழ்த்தவினைகள் பொருந்திடார்
வேதமாமுனியே பரஞ்சோதியாள்
விந்தையென் சொலயானனுந்தனைக்
கோதுவானி புலகுக்குணர்த்தியே
யொழிந்திடாப்பவம் யாவுமொழிப்பையே.

விருத்தம்

என்னையொத்த தபோதனன் பரமீசைசெய்கையு
ணர்ந்தவன்
மன்னிலத்தயவதனனாகி மகிழ்ந்துறைந்திடு மாமுனி
தன்னிடத்து நீ செல்கவென்னவே சாற்றிமாயன்
மறைந்தபின்
அன்னதொத்திவர் வேண்டவம் முனி யன்னைதத்து
வங்கூறுவார்.

கீர்த்தனம் இராகம் சுருட்டி தாளம் ஆதி

பல்லவி

அனாதிசத்தியின்செயல் காணுலகினில் யாவு
மகஸ்தியனே

அனுபல்லவி

அனாமயரூபிணி ஸதாசிவமோகினி
ஆத்மஞானதாயினி யாகிலாதாரகாரிணி- அனாதி

சரணங்கள்

தர்மமதர்மமும் ஞானமஞானமும்
தானமதானமும் தாபமதாபமும்
கர்மமகர்மமும் காரியமகார்யமும்
காலமகாலமும் காமமகாமமும்— அனாதி
இம்மைமறுமையு மிருவினைகளுமிந்த
இகத்தினிற்போகமும் பரத்தினில் மோட்சமும்
நன்மையும் தீமையும் நரருக்குந் தேவருக்கும்
நல்குவது முத்தொழி னடத்துமெத்துறைகட்கும்—
அனாதி
போதமுணர்ந்தார் போற்றும் பரகிர்திவடிவமாகிச்
புவனவ்சீகரியாய் ப்ரவர்த்தியெனவுமாகிச்
சீதமதியணிவார்தாமும் மயக்கமாகிச்
சென்றுகலந்தோர் சேனையைத் தந்தவளாகியருள்—
அனாதி

விருத்தம்

காய்ந்து காமனையெரித்துக் காமநோயகன்ற
நாதன்
சேர்ந்தொரு சேயையீன்ற செய்தியைச்
செல்வீரென்னத்
தாழ்ந்தகஸ்தியன் விரும்ப சாஸ்தாவையீன்ற
செய்தி
தேர்ந்தயவதனன்றானுந்தெளிவுறச் செப்புவானே.

கீர்த்தனம் இராகம்-கமாசி தாளம்-ஆதி

பல்லவி

பாற்கடல் கடைந்தார்முன் சேர்க்கையாய்ப்த் தேவாசுரர்

அனுபல்லவி

தீர்க்கமந்தரத்தை மத்தாக்கி யமுதமுண்ணப்- பாற்கடல்

சரணங்கள்

கோவமுனி துர்வாசு சாபமிடத்தளர்ந்து
தேவராஜனையுற்ற க்ஷோபமெலாமகற்றப்- பாற்கடல்
வானவர் குலந்தக்க வானநாடு சிறக்கத்
தானவர் பலந்துய்க்கத் தானவாரி விதிக்கப்—
பாற்கடல்
கற்பகம் முதலான பற்பலவகைகாண
அற்புதவடிவான சிற்பரைமாதுந்தோணப்- பாற்கடல்

விருத்தம்

பாலாழிகடையவொரு பாசமாகப்
பணித்தபெரும்பையரவங் கொதித்துச்சீறு
மாலாலம் வந்தபொழுதரன்முன்னோடி
அரியயனுமமரர்களுமபயங் கேட்கக்
கோலாலவிடம ருந்திப் பரமன்காக்கக்
குரைகடலைப்பின்னுமவர்கடைந்துவந்த

மேலானவமுதவர்க்கு விளம்புதற்காய்
மின்னனையமோகினியாய் வந்தான் மாயோன்.

கீர்த்தனம். இராகம்-பலஹரி. தாளம்-ஆதி.

பல்லவி

பாகி லினியமொழித் தோகயாய் மாயன் மாயா
மோகினியாகி வந்தான்.

அனுபல்லவி

போகமுத்திவடிவகாகுஞ் சத்தியை நாடி
யோகினியாகுஞ் சிவபாகினியருட்டேடி
பூண்டகுண்டலமாவுந் துயில்
தாண்குமுலைகுதிபோடவும் விழி
திண்டிநின்றவர் வாடவும் யெழில்
வெண்டியென்பர் கொண்டாடவுந் தேன்— பாகிலினி

சரணங்கள்

தண்டைநூபுரம் பாதப் புண்டரீகத்திற்பாடக்
கண்டவர் மாரன்வாளிச் சண்டவாரியில் மூட
உண்டிலையெனுமிடைகொண்டுநடம் புரியச்
சண்டையகன்றசுர ரண்டையிற் போய் நெரியத்

தாழ்ந்து பார்த்து நடக்கவும் விழி
பாய்ந்து நெஞ்சை மயக்கவும் துடை
சேர்ந்த துயிலை விடுக்கவும் மறு
கோர்ந்தெடுத்திடைமறைக்கவுஞ் செய்— பாகிலினி

தாலிமணிவெண்முத்துமாலை தளதளென்ன
ஆலிலையுதர ரோமாளிபடர்ந்து மின்ன
நீலவளிக்குழலில் மேலலர் மணம்வீச
பாலமதிற்றிலகம் மாலுறும் படிபேசத்

தாங்குவளைகள் கிலுங்கவும் விரல்
வீங்குமோதிரமிலங்கவும் மதி
யோங்குவதனம் விளங்கவும் நில-
வேங்குசிறுநகைவதொலங்கவும் தீம்— பாகிலினி

மின்னலிளங்கொடிபோல ன்னநடைநடந்து
கன்னியழிந்த வேசை யென்னவங்குதொடர்ந்து
வன்னமணிப்பந்தாடித் தன்னுடையரை நீங்கிப்
பன்னகவல்குல்காணப் பின்னவள் நாணந்தாங்கி

மீனைநோக்கிநோக்கியே பெருந்
தானவரைவசமாக்கியே வமு
தானபாத்திரந்தூக்கியே யவர்
பானஞ்செயப் பந்திநீக்கியே நல- பாகிலினி

விருத்தம்

பகைகொண்டுபடைகளேந்திப் பயனிலாப் போர் விளைத்துப்
பாழிலே மடியவேண்டாம் பாற்கடல் கடைந் தெடுத்த
புகழ்கொண்டவமுதையுங்கள் பொருட்டுநான் பகுதி செய்து-
புசித்திடத் தருகுவேன் நீர்பொறுத்திடுவீர்க ளென்ன
மகிழ்கொண்டுரைத்துதான வானவர் தமை மயக்கி
மவுனமாயமுதமுண்ண வகுத்திரு பந்தியாக்கித்
திகழ்கொண்டு வந்ததன்னுவந்திரிகரத்திலுற்ற
திப்பியவமுதைவாங்கிச் சிற்பரைவிளம்பலுற்ருள்.

கீர்த்தனம் இராகம்-பைரவி தாளம்-ரூபகம்

பல்லவி

அமுதம் விளம்பினுள் அகிலமோகினி புகழ்சித்ரூபிணி

அனுபல்லவி

அமரர்தானவரடும்போரை மாற்றி
அவர்களைப்பந்தியாயிருத்தித் தேற்றி- அமுதம்

சரணங்கள்

புத்தமுதப்பாத்ரமிடக்கையில் வாங்கிப்
பொன்னின்றவிவலக்கரத்தினற்ருங்கி— அமுதம்

முன்னம்வானவர்கள் பந்திசென்று நண்ணி
மூடவசுரர்க்குக் கோவிபோடவெண்ணி— அமுதம்
பாதகவசுரர் கொங்கை பார்க்கக்காட்டிப்
பானந்தேவர் செய்யத்திருவருளூட்டி— அமுதம்
புன்சிரிப்புக்காட்டிக் கொஞ்சிக்கொஞ்சிமலர்
பூத்தகொம்பரென நடந்து பாற்கடல்— அமுதம்

விருத்தம்

பாகமுளதேவர்களுக்கமுதமீந்து
பாத்திரத்தைதானவர்கள்பந்திவைத்து
மோகினிமறைந்திடவெழுந்துபார்த்து
மோசமிவள்செய்தாளென்றசுரர்சீறி
வேகமொடு போர்செய்து சுரராற்றோற்று
மேவினர்கள் பாதாளபப்பால்வானோர்
போகமுறுவானாட்டின்செல்வம் பெற்றார்
போதமுனிநாரதருங்கைலையுற்றார்

கீர்த்தனம். இராகம்-ஆரபி. தாளம்-சாய்ப்பு

பல்லவி

போற்றிபோற்றியென்று புகழ்ந்து பாடிக்காதில்
ஏற்றினாரிப்புதுமை.

அனுபல்லவி

நீற்றைப்புனைந்த சிவநேச முறுநாரதர்
ஆற்றைச்சுமந்தருளு மமலனடிபுகுந்து- போற்றி

சரணம்

பாரினிற்சுராசுரர் பகையொடுஞ் செய்ததீய
போரினிற்புகழ்மிகுபொற்கொடியென மாயன்
ஆரினியழகுள்ளாரகிலமெங்கணுமில்லா
நாரியாமென மெள்ள நடைந்து குழைந்து செல்ல
சூரதானவர்கள் வாடினார் சுகஞ்சுரர் களங்குகை
கூடினார் கண்டோர் மாரனோயினால் மூடினார் அந்த
மகிமைசொல நானிங்கோடினேன் ஐயா— போற்றி

விருத்தம்

நாரதர் திரும்பிசொல்ல நாதனுமுமையாளோடு
நாரணன்பதியிற்செல்ல நான்முகன்றானைநோக்கி
ஆரணந்தேடநின்ற வமலனையேத்தி வாழ்த்தி
யன்றவர் காணவேண்டி யருள்மொழி கேட்டுமாயன்
காரணமாயனாதி சத்தியைக்கலந்து காமக்
கண்ணியாய்த்தழைந்ததோர் பூங்காவிடை
நின்றான்கண்டு
மாரனைகாய்ந்தசோதி மனமயல்கொண்டு சொந்த
மாதினைவிடுத்தம் மாயா மாலைமேவத் தொடர்ந்தான்

## கண்ணிகள்

இராகம்—நவரஸி. காளம்—சாய்ப்பு.

ஆசையிலா மாரநாசனன்மோகினி
யாசைகொண்டு தொடர்ந்தான்—கண்டு
கூசிமனம் மிக ரோச மடைந்தாள்போற்
கோதையவள் நடந்தாள்.

மையல்மிகக் கொண்டங் கையனவள் முலை
மார்பணையப் பிடித்தான் அவர்
கையைத்தவறிக்கொண்டுய்யானமெங்கணுங்
காமக்கண்ணி ஒளித்தாள்

விந்துசிதறப்பெரு மோகங்கொண்டந்த
விந்தையாளைப் பெருமா னவள்
முந்தியையீர்த்து முடிந்த குழல்சோர
மோகந்தணிந்திடுவாள்.

சந்தன சம்பகமந்தார கற்பக
சாதிபலதருக்கள்—வீசுங்
கொந்தலர் வாடைகளோங்கி விளங்குங்
குளிர்ந்த பொழிலினுக்குள்.

சாந்துபரிமளமேந்தும் முலையிணை
தாங்கியமாதவளைப் பரன்
சேர்ந்துபுணர்ந்து மகிழ்ந்துடனேயங்கு
தேர்ந்தானொருமதலை,

பூதேசனுற்றநந்ததோரவன்றான்பூத
சங்கப்பெருமானே லோக
மாதாவினாலோகா தீதனும்மோக
வசம்பெறலானானே.

அன்னசுதனுமரிஹர புத்திர
னாகிச்சிறந்து சென்றான்அதன்
பின்னந்தமோகினிவேடம் மறைந்து
பிரிந்தவருமகன்றார்.-

விருத்தம்

இன்னமுஞ்சொல்வேன் கேளாயெம்பராபரையின்லீலை,
தன்னிகரில்லாவீசன்றக்ஷ புத்திரியைநீங்கி
உன்னதயிமையமேகியுறைந்த நாளுலகமெல்லாம்
தன்னரசாண்மைகொண்டோர் தானவன் பேர்சிறந்தான்.

கீர்த்தனம். இராகம்-காம்போதி தாளம்-ஆதி

பல்லவி

ஈசனருள்வரத்தால்த் தார காசுரன் பேரெடுத்தான்

அனுபல்லவி

வாஸவன்முதலர்மசேஷவானவர்களைத்
நேசகாலமும்தொண்டுகூசாமற் புரிந்திட— ஈசனருள்

சரணங்கள்

வானமாதர்கணிதந்தானவர் மணைத்தாதி
யானதன்றியும் மதுபானஞ்செய்வர்க்குவெகு
மானமழிந்து பலவேன்ஞ்சுமந்துமிகு
தீன்ராய்த் திரியவும் வானநாடழியவும்— ஈசனருள்

போரில்மூவர்கள் மற்றும் யாரும் ஜயிக்கவொண்ணு
வீரம்மிகுந்தவெகு சூரதானவரோடும்
பாரும்வானமுமொலித் தூருங்கடல்களேழுஞ்
சாருந்தீவுகளுமாங் காரவாணைசெலுத்தி— ஈசனருள்

விருத்தம்

கண்டகன்றுரசன்செய்கடினமுமவன்பாலேகிச்
சண்டையிற்றேவர்பெற்ற தளர்வையுஞ்சாற்றிப்பின்னர்
தண்டனிட்டயனை வாழ்த்தித் தேவர்கோனுந்துதிக்க
அண்டர்களோடும் வேதரியினாலயமடைந்தார்.

கண்ணிகள். இராகம் செஞ்சுருட்டி தாளம்-ரூபகம்

வானவர்சூழ வைகுண்டமேவி மலரோன்மாயனைப் பணிந்தார்
நீனர்களெம்மைப் பாலிப்பீரென்று சிறந்த துதிகள்
மொழிந்தார்
தேனலர் சூடிச்சேடனுடலிற் றிருபள்ளிகொளுநாதா
தானவர் பயந்தடுத்தருளுவாய் சரண்சரணமென்றுதா
தாரகன்சிங்கவதனனிருவர் தம்பிகளோடுஞ்சூரன்
கோரனவன்செய்கொடுமையிற்பட்டுக்குறைந்தார் தேவர்
கள் வீரம்
ஓராயிரத்தெட்டண்டமடக்கி யுலகிற்றீங்குகள் செய்வோர்
ஆராலும்போரில்வெல்லக் கூடாதவமரரறங்கள் கொய்வோர்
பங்கயக்கண்ணு பங்கயநாபா பங்கயப்பாதா போற்றி
பங்கமில்லாத பாற்கடலுற்ற பாவைமணாளா போற்றி
பங்கயத்தயன் பணிந்திந்த வாறு பலவாய்த் துதிக்கநாடி
சங்கரன்புற்றரன்சித்தையுற்ற சாமளனருட்கூடி
தாரகன்போரிற்சக்கரம் நீங்கித் தளர்ந்து பின்பயங்கொண்டு
மேருகுகையிற்றுயின்று கனவில் விழித்தரனாணைகண்டு
ஆருமசுரரங்கணுகக் கூடாததன்மையாற்றேறி
சூரரைவெல்லச்சூக்குமமான துறையொன்றுணர்வுற்றுறி

விருத்தம்

உரகமேற்கொண்ட மாயவனயன் முதலோரை
யுளமிரக்குற்றுநோக்கி
யுங்கள்வரவோர்ந்துமலைநீங்கியிங்குற்றன
முபாயமொன்றின்றுகேள்மின்

புரமூன்றெரித்துமெரிவிடமுண்டுநமையாண்ட
புனிதசிவனலதிதற்கோர்
புகலிடம்பிறிதிலோம் போயங்குணர்த்துவோமென்றிது
புகன்றவர்களோ
டருந்தவமியற்றினரனந்தநாளதையறிந்
தரனுமாவிற்பவித்தார்
அடிமலர்பணிந்து துதிசெய்தரியும்வேதன்முதலோ
ரவுணர் தீங்குணர்த்தத்
திருமகவளித்தசுரர் தீமைகளற்றுவோஞ்
சிந்தையஞ்சீர்களென்றே
சிவபிரானருள்செய்தகன்று நாள் பலநீங்கி
தேவர்மால்க்கீதுரைப்பார்.



கீர்த்தனம். இராகம்-தனாசி தாளம்-ஆதி

பல்லவி

என்னசெய்வோம் மாயனே. அசுரர்துன்ப
மென்றுதீர்வோந் தூயனே.

அனுபல்லவி

முன்னம் தவம் புரிந்தும் முக்கண்ணனருள்பெற்றும்
முடிந்திலைத்துன்பமையா நெடுங்காலமாகவுற்று-மென்ன

சரணங்கள்

சூரன் செய்திடுதுன்பஞ்சொல்லின் பொறுதிகொஞ்சம்
துணைவரிருவர் பொல்லார் துணிவுற்றதுட்டப்புஞ்சம்
தாரகன் முதற்றம்பிதானதிற் பெருநஞ்சம்
தருங்கொடுமையால் மெத்தத் தயங்குறோமையா
நெஞ்சம்-என்ன
தேவர்மாதரையெல்லாஞ்சிறச்சாலையிட்டாஞ் பாவி,
திசைநாதர்களைமுற்றுந்தண்டித்தான் கடுங்கோவி,
ஏவல்செய்தவனுக்கா யிழக்கின்றோம்யாங்களாவி-
எம்பெருமானேயிதற் கில்லையோவின்னங்கேள்வி- என்ன
அவியுண்டுடல்வளர்க்கு மமரர்கள் யாங்களெல்லாம்
அவியின்றிக்காலம் நீளலாக்கினானதிபொல்லான்

இவர்கள்செய்தீங்குகளாலெளியரீஜத் தேர்ந்தெல்லாய்
எம்பெருமானேயிதற் கெங்கட்கோர் கதிசொல்லாய்-என்ன

விருத்தம்

தேவர்கடம்மொழிகேட்டுச் செங்கண்மாலுஞ்
சிந்தைசெய்துசிவன் செயலையுணர்ந்துபேசித்
தேவிபிரிந்தரன்யோகத் திருக்கமட்டும்
சிந்தைசலியாதாண்பெண் சிறப்புறாது
தேவர் கடந்தேவனைவிட் டிமகிரிக்குச்
சேயானபார்ப்பதியைச் சிவன்பாற்சேர்க்கப்
பூவயனோடுஞ்சிந்தை செய்துமாயன்
பூவம்பன்றனையழைத்தும் புகலலுற்றார்.

—0—

கண்ணிகள். இராகம்—கானடா தாளம்—ஆதி

உலகில் வல்லமைபெற்ற வுயர்ந்தமதிசிறந்த
கலைபெருகியமன்மதா தேவர்க்குரிய காரியமிதுசெய்குவாய்
தங்குமுயிர்கட்கெல்லாந் தாயுந்தந்தையுமான
அங்கமிரண்டாய்மன்மதா வேறுவேறாக வமர்வதையொன்று
மலைகட்கெல்லாமுளர்ந்த மலையாசிய கைலாஸ-
சேர்ப்பாய்
மலையிலோர்பாதிமன்மதா ஓர்பாதியிம வரயிலும் வாழ்
வதுணர்வாய்
அம்புமலர்களாலே யரன்திருமேனிசாத்தி
இன்புறச்செய்வாய் மன்மதா—
இதனாற்குற்றமிலைச் சிவனருள்பெறுவாய்
என்றுசொன்மொழியைக்கேட் டிரதியோடுந்தளர்ந்து
நன்றுநன்றிது மாயனே நானந்தமுக்க ணுதனிடத்தணுகேன்
தேவதேவனை நீங் கலாக வெத்தேவரேனும்
ஆவல்கொடுப்பேன்மாயனே-பெண்கள்பிறகே
யலைவிப்பேனோர் கணையால்
எங்கும் சயம்பெறுதற்கி கின்பவருளைச்செய்த
சங்கரனிடம்மாயனே நான்செல்லினதுசாமி த்ரோகமல்
லவோ

சங்கரனிடஞ்சென்ருற் றலைநீட்டாதென்னம்புகள்
அங்குசென்றிடேன் மாயனே—
அனல்விழியாலழிந்துவெண்பொடியாகுவேன்
மாரன் சொல்லிதுகேட்டு மலரோனடுத்தழைத்து
வீரமிதுவோமதனுசீசியென்ன வார்த்தைசொன்னுயுசிதமாய்
எல்லார்க்கும் வேண்டிமாய னியம்பியுமிணங்காத
கல்லாவுன்மனம்மதனா யெனப்பலவுங் கந்தர்ப்
பனோடுகூறினான்

விருத்தம்

அவமிலாவன்புளத்தா லடித்தல் மற்றெதுசெய்தாலு
மதுவெலாமமலனுக்கின் பாயிடும்மனம் வேறாகி
நவமலரிடி னுநன்மை யாயிடாததனால்முக்கண்
ணாயகன்முனநான் செல்லேனெனமதன் நவிலக்
கேட்டுச்
சவதநாஞ்செய்வோமென்று சதுமுகன்சொலப்பயந்து
தானதற்குளமிசைந்து தனதுதேவிக்குரைத்தான்
இவரது சாபநீக்கவிறையுண்டங்கிறைகோவத்துக்
கெங்கணுங்கதியிலோமென் றிரதியுஞ்
சொலித்தடுப்பாள்.

—0—

கீர்த்தனம் இராகம்-புன்னாகவராளி. தாளம்-ஆதி

பல்லவி

ஆகாதாகாதே—ஏதுமக்-காகாதாகாதே

அனுபல்லவி

மோகாதிகணீக்கி முத்தியருளும்ஞான
மூர்த்தியாகியபரம்பொருளின் முன்போய்த்ரோகம்-ஆகா

சரணங்கள்

யாவர்க்குப்பிழைத்தாலு மாற்றுதலுண்டுநாட்டு
மானுக்குப்பிழைத்திடி லனர்த்தப்படவேமூட்டும்
தேவர்க்கிதனாலென்னே ஜீவநாதாநான் பூட்டும்
திருமங்கல்யத்துக்கன்றோ தீங்குவந்தல்லலூட்டும்-
ஆகா

எல்லாத்தெய்வத்துக்கும்மேலாகிய இறைவோனே
எவராலுமறியக்கூடாத பெருமானே
எல்லாவுயிர்க்குமுயிராயுள்ள மொளித்தோனே
இவர்க்குநீர்குற்றஞ்செய்தா லெரிவது திண்ணந்தானே-
ஆகா

இறையிவர்செயலெல்லா மினிதுணர்ந்தறிவீரே
எரிமுன்சலபஆசெல்வதாமோ வின்றுணர்வீரே
மறைகளறியாமக தேவன்பெருமையாரே
வகுத்திடவல்லார்வில்லை வளைத்திடிற்பொடிவீரே-ஆகா

விருத்தம்

தடுத்ததன்மாதைத்தேற்றிச் சதுமுகன்சொல்லுக்கஞ்சி
சங்கரன்றன்னைநெஞ்சந் தனிலுன்னியிரதியோடும்
நடித்தரன்கைலைமேவி நன்மணிக்கோயில்புக்கி
நந்தியைப்பணிந்துசெய்தி நவின்றனன் நவிலக்கேட்டு
பிடித்தருகழைத்தணைத்துப் பெரும்பாக்யவானீயென்றும்
பெருமானுக்கெனினுமுன்பாற் பெருமனக்களிப்புண்டென்
றும்
எடுத்தவருரைத்துட்போவா யென்னலுமீசன் பின்போய்
எழில்மேனிபதறக்காவி னிடைமறைவுற்றுநின்றான்

கீர்த்தனம். இராகம்-தோடி தாளம்-ரூபகம்

பல்லவி

மன்மதன்கைலைப்பரமன்பின்மேவி மறைவுற்றுநின்றான்.

அனுபல்லவி

தன்மனைவியாள் சொல்லைவெறுப்புற்றுச்
சதுமுகன்மாயனின்றபணிபெற்று—

சரணங்கள்

வஸந்தன்முதலாம் பரிவாரங்கூட்டி
மலையமாருதத் தேரிலேறியோட்டி
இசைந்தகுயிற்சங் கீதங்கள் மூட்டி
இன்புறமச்சக் கொடிக்கூறையாட்டி— மன்மதன்
கிளிகள்தேரீர்த்துக் கிரியேறிசெல்லக்
கிளந்தகரும்பு வில்வளைத்துமெல்ல

அளிநாணியேற்றி ஐயம்பிஞனல்ல
அமலனை ஆதிப் பரமனைவெல்ல— மன்மதன்
களங்கில்மனைவி யோடும்வியந்து
கச்சைவாறி றுக்கிக் காமம்துயந்து
விளங்குநந்திசொற் கேட்டுநயந்து
மேலவாசலூடே மேவிப்பயந்து— மன்மதன்

விருத்தம்

மாலயன்வாஞேர்மற்றும் வான்மிசைவந்துநோக்கி
மாரனுக்கானிவாரா வண்ணமந்திரஞ்சபித்தார்
காலனைக்காயந்தமுக்கட் கடவுளைக்காணுமாறிக்
காட்சிபெற்றதஞற்பாவங் கரைந்தருளடைந்தோமென்றே
மூலனைநினைந்துஸர்வ மோகனமநுச்சபித்து
முடுக்கிஞன்மணப்பூவாளி முதுமறைக்கெட்டாதான்மேல்
நீலகந்தரன் கோபக்கண் ணெருப்பிஞற்பொடிந்தான்மாரன்
நிமலன்றனருளாலாந்த நீற்றினின்ருெருவன்வந்தான்.

—o—

கீர்த்தனம். இராகம்-ஆனந்தபைரவி. தாளம்-ஆதி.

பல்லவி

வீரனொருவன்மாரன் பட்டபொடியினின்று
விமலன்முனேயுதித்தான்

அனுபல்லவி

பாரும்விண்ணும்புகழப் பரமன் கண்டுமகிழத்
தீரமிகுந்தகுமாரஞயற்புத தேககுலட்சணயோகவாஞகிய- வீரன்

சரணங்கள்

வெண்ணீறில்ச்சித்ரகர்மா பண்ணியவுருவினை
மெய்யன்பார்க்கவுமுயிர் மேவிச்சிறந்தவனை
கண்ணுேக்கிப்புணர்ந்தக் கணநாதன்சொல்லைத்தோந் தங்
கண்ணுவரசேயரனேபரனே யென்ஞளுமெனக்கருள்வா யெனவே-வீர

விருத்தம்

இன்னவண்ணமுதித்தெழுந்த விளங்குமாரனையன்புவைத்
தீசனைதொழுதேத்துமாறுப தேசமீந்தகணுதிபன்

தன்னுரைப்படிநாதனைச் சதுருத்திரத்தொடுதவமுறச்
சங்கரன் கருணாகரன்சடை தங்குமாமதிபூஷணன்
அன்னவன்முனெதிர்ந்துவேண்ட வரங்கள்யாவுமளித்துபின்
னறுபதாயிரமாண்டுவாழவு மருளினன்றளர்வின்றியே
இன்னசெய்தியறிந்துவேதனும் பண்டுபண்டிதுவென்றதா
லெங்கணும்புகழ்பண்டதானவ னென்றுநாமம்விளங்கினன்

கீர்த்தனம். இராகம்-நாதநாமக்ரியை தாளம்-ஆதி

பல்லவி

அசுரேசனாய்விளங்கினன் உலகினில்
அசுரேசனாய் விளங்கினன்

அனுபல்லவி

அசுரேசனாகியென்று மரனடிக்கன்புகொண்டும்
நிசபூசைசெய்துகந்தான் நிறைந்தசெல்வமிகுந்தான்- அசுரே

சரணங்கள்

பாதலத்தசுரரெல்லாம் பருங்கடற்போற்
றூதர்விட்டழைத்துநல்ல சுக்ரகுருவால்
ஆதிநாளிரண்யனுக் கயன்கொடுத்ததாயீந்த
சோதிமகுடந்தாங்கிச் சுரர்கண்டகனாயோங்கி- அசுரே
சிற்பிமயனையழைத்துச் செல்வஞ்சிறந்த
வற்புதநகர்நிர்மித்துச் சோணிபுரமென்
றப்பதிக்குப்பேருமிட்டமராபதியையொத்து
மெய்ப்பொருளும்படைத்து மெண்டிசையுஞ்சயித்தும்- அசுரே
அசைத்துப்புசங்களினின்றே யத்தானவேச
னிசைத்துச்சகோதரன்றே இருவரீந்து
விசுகரன்விஷங்கனென விளங்கும்பேருங்கொடுத்தே
வசக்கிவலிகள்பெற்றே வருமவரோடடுத்தே- அசுரே

விருத்தம்

தானவர்குலத்துக்குள்ள சாமரைகுடைகள்வாளி
தநுமுதற்படைகள்மற்றுந் தானவகுருவாற்பெற்று
சேனைமாலானைசூழச் சிங்கபீடத்திற்கொண்டு
தேவசத்துருவோடெட்டு மந்திரித்தலைவர்போற்ற
வானமாதர்களையொத்த குமுதினியாதிமெத்த
வாமலோசனிகவான மணைவிகளின்பமோடும்
ஞானநாயகனாமீசன் நளினபொற்பாதபூசை
நாடொறுஞ்செய்துசெல்வ நலமுற்றான்பலம்
பெற்றானே.

—0—

கண்ணிகள் இராகம்-செஞ்சுருட்டி தாளம்-ரூபகசாய்ப்பு

பற்றித் தொடர்ந்தவசுரப்படையொடும்
பண்டாசுரன்சிறந்தான் வீர
வெற்றிக்கொடி நாட்டித்தானவ வீரர்கள்
விண்ணுமண்ணுநிறைந்தார்
அஞ்சியமரேசனுள்ளந்தளர்ந்தம
ராபதிசீர்குறைந்தான்-வாடிப்
பஞ்சுபோல்முப்பத்துமுக்கோடி தேவரும்
பண்டன்காற்றிற்பறந்தார்
ஆண்டோரறுபதினாயிரமுந்தீர்ந்
தசுரேசனுக்கிறுதி காலம்
தீண்டவும்வைகுண்டநாதனமரர்க்குத்
தீங்ககலக்கருதி
பண்டதயித்தியன்சேய்யுஞ்சிவபூஜா
பத்தியைமோகத்தினா லவன்
விண்டிடுமாறுதன்மாயயை மோகினி
வேடமாக்கிவிடுத்தான்.

விருத்தம்

மாயயோர்ம்தனவல்லியாய மோகினியாய்வான
மாதர்களோடுங்கர்னமோதுவல்லகிகைக் கொண்டே

தீயபண்டாசுரன்வந்துலவு பூங்காவில்மேவிச்
செம்பகத்தருக்களூடே பொன்கொடிபோலுலாத்தித்-
தூயவெண்மதிமுகத்துமாதுகாமினி யனங்கள்
சுந்தரநடனயின்பானந்தமோவெனவும்பாடிச்
சாயுவாள் தன்னையந்தத் தானவநாதன்கண்டு
தாகமாயிளகிக் காமமோகமாய்த்தளருவானே.

கீர்த்தனம். இராகம்—மோகனம் தாளம்—ரூபகம்

பல்லவி

ஆரோ யிவ ளாரோ-அனங்கிளிபோலணங்கினியாள் ஆரோ

அனுபல்லவி

ஆராயினுவமைத்திவள்தன்னை-அணைந்துமென்மயல்
தடுப்பேன் நினைந்தவரங்கள் கொடுப்பேன்— ஆரோ

சரணங்கள்

மன்னிற்செம்பொன்மானோ-இவள்-மருங்குவெகு
சுருங்கியதோ
மின்னற்கொடிதானோ-மாரில்-விளங்குமுலை யிளங்கனிக
ளென்னப்புல்குவேனோ-மன-திமுக்குதிருவிழிக்கணைக
ளிருத்துமுகம் பொருத்துவதற்- காரோ
செம்பொற்சிலைதானோ-செக்க-ச்சிவந்தயிதழ்நுகர்ந்திவளை
இன்பம்பெறுவேனோ-மார-னிடுங்கணைகள்கொடுங்கனல்
போல்
வெம்பல் சகிப்பேனோ-நீல-விழிக்குளெனையிறுக்கியுளம்
மயக்குவது தரிக்கறியேன்— ஆரோ

விருத்தம்

என்றிவனினைந்துமயல்கொண்டவளிடஞ்சென்றி
ரங்கினனதற்கரும்பொன்
குன்றனையசெம்முலைகுலுங்கமயல் வீசிமதனன்
கொடுகனற்குள்வாட்டி

அன்றுமுதலாண்டயுதமாதவமெதுங்கெடுத்
தறிவையுமயக்கியவனோ
டென்றுறவிருந்தனள் புரந்தரனைநாரத
ருகந்திவையுரைக்கலானார்.

---

கீர்த்தனம். இராகம்-முகாரி தாளம்-அடசாப்பு

பல்லவி

ஸமயமீதமரேசனே கேள்-நல்ல-ஸமயமீதமரேசனே கேள்

அனுபல்லவி

ஸமயமிது தவமுயல விமையகிரி செல்லுவீர்
ஸகலவர தாயினிமை யகமுணர்வு கொள்ளுவீர்- ஸமய

சரணங்கள்

நாரணன்விடும்மாயை நாரிவசங்கொண்டு
வீரர்புகழ்பண்டாசுரன் வேள்விவிண்டு
பூரணசிவன்பாத பூஜையுமகன்று
மாரமயல்கொண்டனன் மயக்கறுமுன்சென்று
மங்களம் விளங்கவரு ளுங்கருணை பொங்குசிவ
சங்கரிப தங்கருதீ ருங்கள்துய ரங்கெடவே- ஸமய

விருத்தம்

புண்ணிய முனிவர்சொல்லைக் கேட்டகம் மகிழ்ந்துபோற்றிப்
புரந்தரனாதிதேவர் யாவருமிமையஞ்சென்று
கண்ணுதற் சடையுட்டங்கிக் கசிந்துபாய்ந் தொழுகுங் கங்கைக்
கரையிலோராயிரப்பத்தாண்டுமை கருணை நாடி
எண்ணிநற்றவம் புரிந்தா ரிந்திரப்ரஸ்தமாயவ்
விடமதுபேர்விளங்க வீதறிந்ததனை மாற்றற்
கெண்ணிய குருவுணர்த்தச்சென்றனன்றானவேசன்
இறைவியினருளால் வன்னிக்கோட்டை கண்டீது செய்தான்.

கண்ணிகள். இராகம்—கரஹரப்ரியை தாளம்—ஆதி

நாலுபுறமும் சென்று சுற்றிப்பார்த்தான் எங்கும்
நாடக்கூடாமலே கோபம்மூத்தான்
ஆலாலம்போலேசீறி வில்லைவளைத்தான் அதில்
அனிலாஸ்திரம்முதலா யெதும்விடுத்தான்
ஏர்க்காமைகண்டுமன மிடிந்துசென்றான் தேவர்
எல்லாம்பயந்துதவம் புரிந்துநின்றார்
தீர்க்கவனற்கோட்டைக் குள்ளேயமர்ந்தோ மினிச்
செல்லும்வழிகாணோ மென்னநொந்தோம்
நாமினியென்னசெய்வோ மென்றுநாடிப் பின்பு
நாரதர்சொற்படியே வொன்றுகூடி
மாமகயாகஞ்செய்யக் கனல்மூட்டினா ரதில்
வானோர்கைகாலுடல மறுத்தூட்டினார்
இந்தமகாயாகத்தைக் கண்டறிந்தாள் உல
கெல்லாம்படைத்தளித்துப புகழ்சிறந்தாள்

விருத்தம்

ஒருகோடிபானுவெனவொளிர்சக்ரராஜரத
மோமகுண்டத்தினடுவே
வருமாறுமதுநடுவிலுதயகதிரோனென்ன
வாலைவடிவோடுலளிதா
பரதேவியுறையவும்பாசங்குசம்புஷ்ப
பாண்டுமொடுகன்னல்வில்லுங்
கரநாலிலுநின்றுபொலியவுங்
கருணைநிதியென்னவந்தவதரித்தாள்

—0—

கீர்த்தனம். இராகம்-நாட்டை தாளம்-ஆதி

பல்லவி

தேவியவதரித்தாள் லளிதாபுர தேவியவதரித்தாள்.

அனுபல்லவி

தேவர்முனிவர்கூடிச் செய்தமகாயாகத்திற்
செந்தீவலம்புரியுந் தசயோசனைகுண்டத்தில்
பாவமற்ற-பார்வைமுற்ற-சோபையுற்ற-ஜோதிபெற்ற – தேவி

சரணங்கள்

பாலசூரியன்போற்ப்ர காசமொடுஞ்சிறந்து
நாலுகரங்களொடு நளினமுகம்மலர்ந்து
நீலகுந்தளம்வாரி நீளமாய்ப்பின்னிவிட்டு
பாலமதனிற்காமன் பணியவோர்பொட்டுமிட்டு
ஆலவட்ட-வானந்தொட்ட-சேலோடாடு-தேரிஞேடும்–தேவி
எண்டிசையும்விளங்க வெத்தேவரும்வணங்கப்-
புண்டரீகப்பதங்கள் பொற்சிலம்போடிலங்க
அண்டம்முழுதுமின்ற வாலிலைவயிறுடன்
கண்டோர்கலியகலக் காட்டுங்கருணையிடங்
கொண்டபார்வை-கொண்டுசேர்வை-கண்டுதேவர்-கால்கை
மேவ— தேவி
நவமணியாபரண நளினக்கங்கணமாட
நவயவ்வனவதியாய் நன்மலர்மாலையாட்
உவமையில்லாவடிவ மோடுங்குண்டலமாட
சிவன்றிருச்செல்வமான சின்மயந்திகழ்ந்தாட
பவங்களற்றபரத்திலுற்ற-தவங்கொள்முத்தி-தழைந்தசித்தி —
தேவி

விருத்தம்

செம்மையெழில்யாவுந் திரண்டுருவமாய்வந்த
சின்மோகனங்கவடிவும்
இம்மைமறுமைக்குரிய வின்பமீந்தருள்கருணை
யென்னக்கனிந்தநோக்கும்
அம்மையுலகுக்கிவ ளனாதிசியாயருள்விலாஸினி
யெனும்பெருமையும்
செம்மலர்ச்சரணமுங் கண்டவுடனேயமரர்
தேர்ந்துளம்மகிழ்ந்தேத்துவார்.

கண்ணிகள். இராகம்—குறுஞ்சி தாளம்-சாய்ப்பு

ஜயஜயஜகந்தனேயே-மஹா-தேவிபராத்பரையே.
ஜயஜயகல்யாணநிலேயேகலாத்மிகே ஜயஜயசங்கரியே.
ஜயஜயவாமாக்ஷி-பரதேவிஸ்ரீ-காமாக்ஷி
ஜயஜயாநந்தசுவரூபிணிகாமேசி ஜயஜயப்ரம்மமயே
ஜயஜயஸ்ரீலளிதே-வரதே-ஸ்ரீகண்டதபிகே
ஜயஜயநாராயணிபரமீசுவ்ரி ஜயஜயஸ்ரீவிஜயே
நமோயிஷ்டதாயினியே-புவனம் பரிபாலினியே
நமோ கலாரூபிணியேயணுவுக்கணுவேநமோபெரும் பெருதே
நமோதேஜோரூபிணியேஜகநாயகியேசிவயே
நமோஜகரூபிணியே சந்திராற்க் வனல்விழியேயம்பிகே
நமோநமோசுர்திமொழியே நமோநமோசிவசகியே
நமோநமோஸாதுசித்தாம்புஜவாஸினியேநமோகினியே
ஆனந்தரூபிநமோ அகிலாதாரரூபிநமோ
தானசுவரூபிநமோதர்மரூபி சராசரரூபிநமோ
கானரஸிகேநமோசிவ காமரஸிகேநமோ
தீனற்கருள்வாய்நமோ தேவதேவன் சிங்காரரஸிகேநமோ.

விருத்தம்

வானவரோடுமிந்தவண்ணமிந்திரன் பணிந்து
ஞானநாயகியை நோக்கிநலமுறத் துதித்தானந்த
மானினேர்விழியிரங்கி வரமெதுங்கேட்பீரென்ன
வானவர் கோனுமம்மைமலரடி தொழுதுசொல்வான்.

—0—

கீர்த்தனம். இராகம்-இந்துஸ்தானிகாப்பி தாளம்-ரூபகம்

பல்லவி

தாயேயருள்புரிவாய்-எங்கள்-தமக்குநீயிந்த வரந்தருவாய்.

அனுபல்லவி.

சேயேயாகயெங்களே விண்ணின்
செல்வம்பெறுவிப்பா யுலகெலாமீன்ற- தாயே

சரணங்கள்

பண்டாசுரனென்றோர்வல்லான்
பார்முதலானவுலகமெல்லாம்
கொண்டாளவுந்துணிந்தான்பொல்லான்
கொடியசெய்கையாமென்னசொல்ல— தாயே
எங்கள்மேல் வெகுவர்மந்தொட்டான்
எம்மையுந்திண்டாடவிட்டான்
மங்களமகஞ்செய்யவொட்டான்
வானுலகத்தைக்கொள்ளையிட்டான்— தாயே
ஆவியிழந்தோர் போலலைந்தோம்
அறுபதாயிரங்காலம் நொந்தோம்
தேவியுன்னையேதவம்புரிந்தோம்
திருவடிகண்டு சரணடைந்தோம்— தாயே

விருத்தம்

பண்டதானவனைவென்றுபாலிப்பாய்தாயேயென்றும்
அண்டர்கோன்மொழிந்ததைக் கேட்டன்னையுமகமிரங்கிக்
கண்டகனவனைவென்றுகருணைசெய்துங்கள்செல்வம்
பண்டைபோற்றருவேனென்றுபரதேவிவரமளித்தாள்.

சந்தவிருத்தம்

சிந்தையங்குதெளிந்துவானவர்சுந்தரத்தின்மிகுந்த தேவியைச்
செங்கைகூப்பிநிரந்துநிற்கவு மதுவேளை
சந்தநான்மறைதந்தவேதனும் விந்தைமாமுனிப்ரந்தமுந்திகழ்
சங்குசக்கிரமேந்தியும்பிறைச் சடையோனும்
அந்தரத்திலுறைந்தமாதருங்கந்தர்வத்திரளுநிறைந்துட
னன்னையைப்பணிசெய்து போற்றவுமுலகெல்லாம்
தந்தைதாய்மகிழ்சிந்தைகொண்டுதழைந்தபுன்சிரிசிந்த நின்றவர்
தம்மைநோக்கினள் கண்டுநான்முகன் றுதிசெய்தான்.

கீர்த்தனம். இராகம்-கல்லியாணி தாளம்-ரூபகசாய்ப்பு

பல்லவி

நான்முகன்றுதித்தான் நாரணியை நான்முகன்றுதித்தான்

அனுபல்லவி

கார்மருவுநீல கண்டனேமகிழ்ந்து
சீர்மருவும்மகா தேவியைப்புகழ்ந்து— நான்முகன்

சரணம்

விசுவகர்மாவோடுரைத்துமனோகரம்
விண்ணோர்நகர்போற்சமைத்துமனோகரம்
அச்வசாலையானைதேர்நிலையங்களும்
ஆஸ்தானமம்மண்டபமந்தப்புரங்களும்
ஆகவற்புதமானவப்பதிபோகவைத்துப்பூங்கோர்விலி
விருத்தி-நான்

விருத்தம்

ஜோதிமயப்பதிபுகுந்துமணிக்ரகத்துட்
டுலங்குசிம்மாஸனத்துறைந்தகளங்கிலானை
வேதமுறைமணவரிசை செய்வதற்கு
வெள்ளிமலையான்விகிர்த வேஷனென்றன்
நாதனவன்றனை வேதன்னினைந்தபோதில்
நயனங்கள்மூன்றுடையான் குமரனாகி
ஆதிபராபரத்தொளியினழகுக்கேத்த
வற்புதசுந்தரவடிவோடங்குதித்தான்

---

கீர்த்தனம். இராகம்—கமாசி தாளம்—சாய்ப்பு

பல்லவி

அதிமனோகரரூபனாய்வந்தான் அங்குமகேசன்
அதிமனோகரரூபனாய் வந்தான்

அனுபல்லவி

அதிமனோகரரூபனாய்வர வதிசயித்தயனும்பணிந்திட
வெதிரிலாவெழிலாட்கிணங்கவெழுந்தகாமேசனென்று
பேரிட அதிமனோ

சரணம்

மகுடகுண்டலஹாரநூபுர மாலைபீதாம்பரமொடும்
மாரகோடிஸமானசுந்தர மானதேஜோமயமொடும்
திகழுமாமதிவேணிமுவிழி திலகசோபிதநுலொடும்
தேவியுந்தரிசித்துமயலுறவாகவுந் தேவர்தொழும்
பெருமையொடும்—அதிமனோ

விருத்தம்

அன்னையைப்பிரிந்திருந்ததென்னுமோர்குறையல்லாமல்
அத்தனுக்கன்றோர் குற்றமாராயும்வகையொன்றின்றித்
தன்னெதிர்வந்ததைக்கண்டம்மையுந்தாகங்கொள்ளத்
தாயினைக் கண்டுமோகஞ்சாமியுங்கொண்டானப்போ
முன்னெதிர்ந்தயன்வணங்கிமூவுலகுய்யும்வண்ணம்
முறைகொடுமணம்புரிந்து முடிக்கபிஷேகம்கொண்டு
மன்னிலிப்புரத்தில்வாழ்கவென்னவும்மனமிசைந்து
மாதர்கள் பலருஞ்சூழ்ந்தஞானநாயகியுஞ்சொல்வாள்

—0—

கீர்த்தனம் இராகம்-பியாக் தாளம்—ரூபகம்

பல்லவி

உலகினிலயான்றனிமைகொண்டாள்
ஒருவர்வசமல்லேன் கண்டாய்

அனுபல்லவி

அலரயனேதன்னிச்சையாயாவுஞ்செய்யுந்தொழிலுடைய-
உலகினி

சரணம்

அன்னைதந்தையிலையெனக்கு அருமணஞ்செய்தீவதற்கு
என்னுருவுக்கனுரூபர்க்கு என்மனம்போதித்தவர்க்கு
அன்னமூருநான்முகனே யானிணங்கிக் கொள்வேனே
கன்னிகையென்றுளுநானே காமன்வசமாகிடேனே-
உலகினி

விருத்தம்

தாய்மொழிந்த வாய்மொழியைச் சதுமுகனுங்
கேட்டுணர்ந்துதடையொன்றில்லா
தாய்நிறைந்த தனிமுதல் நீயாகுமெனப்புகழ்ந்து
சதுர்விதவிவாஹம்

நீயுவந்துபெருமைபெறு சுயம்வரத்தை
மனங்கொண்டுநீபுரிந்து
தூயபரையேயருள்கவென விசைந்து நிறை
பொருட்கெறிந்தாள்தூவெண்மாலே.

கீர்த்தனம் இராகம்—கல்யாணி தாளம்—ஆதி

பல்லவி

தேவியெறிந்த பூமாலே காமேசர் கண்டம்
மேவிச்சிறந்த தந்தவேளை

அனுபல்லவி

பூவயன்மால் புரந்தராதிதேவர்முனிவா
யாவர் களுங்கொண்டாடப் பூவயர் நடமாடத்— தேவி

சரணம்

துந்துமிமுழங்கிடக் கந்தவர்கீதம்பாடக்
கந்தமலர்மாரிகளந்தத்தலத்தைமூட
சுந்தரருத்திராணிசெந்திருவாணி வாழ்த்த
இந்திராணிமுதலாயந்த மில்லாதர்போற்ற— தேவி

விருத்தம்

பங்கயத்தயனும்பின்பு பங்கயக்கண்ணனேடும்
பரன்பரையிவர்க்கு வேதவிதிமுறைமண முஞ்செய்ய
மங்கலமுகூர்த்தமீது சங்கரிஸோதரன் நீர்
வரிசையாய் நடத்துமென்ன முரகரிமனமகிழ்ந்து
எங்கணுமுள்ளதேவர் மங்கலமாதர்வேதத்
தியல்புணர்முனிவர் சித்தர்நயமுறப்பலருஞ்சூழச்
சங்கொடுபூரிபேரி துங்க மேளங்களார்த்துச்
சலகடலெனமுழங்கத்தாயின் மங்கலம் பூரிப்பார்

கண்ணிகள். இராகம்—கரஹரப்ரியை தாளம்-ரூபகம்

நகர்துலக்கிக்கொண்டாடினார் நாரணன்சொல்மொழி
பாடினார்
மகிழுறவானோர்கூடினார் மங்களந்தன்னையேதேடினார்
புகழும் ஸ்ரீலலிதாதேவிக்கும் பூர்ணகாமேசமஹாதேவர்க்கும்
திகழும் விவாஹநாட்கூறினார் தேவர்முனிவர்களுந்தேறினார்

நன்மணித்தோரணநாட்டினுர் நவமணித்தாமங்கள்சூட்டினுர்
பொன்மணித்தம்பங்கள் தாபித்தார்பூமண்டபஞ்செய்து
சேர்வித்தார்
அருமணிமாலைகள் தூக்கினுர் ஆணைமேற்பேரிகைவிக்கினுர்
புரமுற்றுமாணைகள் தாக்கினுர் பூமியெல்லாம் பொன்னா
யாக்கினார்
விச்வகர்மாமன்றமமைத்தான்விமானமொன்றயனுஞ்
சமைத்தான்
அச்வமானைதேர்கணிறைத்தார் அண்டர்கள்மலர்மாரி
யிறைத்தார்
பூரணகும்பநற்பாலிகை பொருத்தினார் களங்குவேதிகை
சீரணியாடைகளெடுத்தார் சிவிகைமேற் கொண்டங்
கேயடுத்தார்
அஷ்டாதசவாத்யமார்த்திட அரம்பையர்களாடி யேத்திட
சிஷ்டர் முனிவரும் மாதரும் திசையெட்டுமாளுகின்ற
நாதரும்
வந்துகூடியேயார்ப்பரித்தார் மாயவன் வேண்டவை
சேகரித்தார்
இந்திராப் பரஸ்தத்தில் மூவரும் இசைந்தார் தேவர்
களெல்லாவரும்

விருத்தம்

வந்துமாமுனிவோர்மறை பாடவும் மங்களகால
மீதென்றுவேதனும்
அந்தவேளையில்மந்திரங்கூறவு மாழிமாதொடுமால்
தாரை வார்க்கவும்
இந்துவேணியனேற்றணையின்கர மிறுகப்பற்றியிடப்
பாகஞ்சேர்க்கவும்
துந்துமிபேரிமேளம்முழக்கவும் சுபவிவாகஞ்செய்தான்
சிவையைச்சிவன்

விருத்தம்

காமாக்ஷி காமேசரிவர் கரிணென்னக்
கமலயனும் போர்மொழிந்து புகழ்ச்சிசெய்ய
நாமேவுவாணி சசிக்மலைமாதர்
நாயகிக்குக்கைலாகு கொடுத்துவாழ்த்தப்
பாமேவுமறைநான்கு முருவாய்த் தோன்றிப்
பலகலையோ டேந்திநிற்கப் பாணிதொட்டுச்
சீர்மேவுசிற்பரையுஞ் சிவனுஞ்சேர்ந்து
திருமணஞ்செய்தரு மறைவாழ்வுறவைத்தாரே.

கீர்த்தனம். இராகம்-அமீர் கல்யாணி தாளம்-ஆதி

பல்லவி

திருமணங் கொண்டருளினார்—
சிவையுஞ்சிவனும் திருமணம்

அனுபல்லவி

சுரமுனிவர் கொண்டாட-துதித்துக்கந்தர்வர் பாட
அரியயன் மகிழ்கூட-அரம்பயர் நடமாட திருமணம்

சரணங்கள்

வாணியிந்த ராணிமலர் மாதுருத்ராணி பலர்
பேணிமங்களங்கூறப் பெரும்புவனங்கள் தேற— திரு
பேரிதுந்துமிடங்கா பெருமேளங்கள் முழங்க
ஆருமானந்தமாக வருமைமகாவைபோக— திரு
எண்டிசையும் விளங்க யெவருமடிவணங்க
அண்டரானந்தங்கொள்ள அசுரர்க்கிடக்கண்டுள்ள- திரு

ஊஞ்சல்

சிந்தாமணிமயச்சிங்காரமன்றுள் செங்கமலத்திதழ்திகழ்ந்த
பீடந்தன்னில்
ஐந்தானதேவரத்னமஞ் சமீதிலணிமாதிசித்திமுதல்மாதர்சூழ
மந்தாரகற்பக நன்மலர்கடூவிவானவரும்முனிவரருந்
தொழுதுபோற்ற
செந்தாமரைமாதரிருவர்பாடச்சிவனுடனேகாமேசி
யாடுமூஞ்சல்.

விருத்தம்

நகர்வலங்கொண்டுவந்த நாயகிநாயகர்க்கு
மகிழுறவாணியாதி மாதராலத்திகாட்டித்
திகழ்மணிப்பாய்விரித்துச் சீருறநலுங்குபாடி
மகிமையாயவரையங்கு மணித்தேங்காயுருட்டிவித்தார்

நலுங்கு இராகம்—குறுஞ்சி.

காமக்கண்ணிதனைநோக்கிக் காமேசன்களிதூக்கி
சீர்மணித்தேங்காயைத் தொட்டார்சிறுநகைப்
போடுருட்டி விட்டார்
பூமிதனை நோக்கியனை பொன்மணித் தேங்காயதனை
நாமகள்பாடலிசைபோல் நாயகன்முன்விட்டதனால்

மோகமதிகொண்டவர்போல் முத்தாணிக்கொங்கைகளதன்
மேல்
தாகமொடுந்தார்வளைகள்தட்டிடந் நானுருட்டினர்கண்
டாகமகிழ்ந்தன்னையுமன்ருவல் கொண்டாளென்னவுந்தன்
தேகமெலாங்கூசல்பெற்ருள் செங்கைசுவந்திடவுமுற்ருள்.

ஸவுரட்ரம். வேறு

உளறுந்தேன்வாய்மொழியாளு மையவள்மணித்தேங்காய்
உத்தமன்முன்னுருட்டியுளமகிழ்ந்தாள் தேவி
மாறிக்காமேசர் காலிற்சென்றதுபட்டதனுல்
மையல்மண்டைக்குக்கொண்டவாறுவந்தார்
முந்துநகையாள்நாணிக் சற்றேவிழியாற்பார்க்க
மோகந்தணிந்துநாதன்முகம் மலர்ந்தான்
காமனையெரித்தபேர் கலங்காதநெஞ்சமுள்ளார்
காமாக்ஷிகண்வலையிற்பட்டிருந்தார்.

வேறு. காம்போதி

தேவர்வணங்கச்செழுஞ்சுடராய்வந்த சின்மயியைத்திருமா
லோடும்
பூவயன்றேடியுங்காணுப்பொருளான பூரணன்சேரவந்தான்
மூவுலகீன்றமுழுமுதலாகியமோகனரூபிதன்னை வேதம்.
யாவுங்கடந்தெங்குமாகிநிறைந்தமெய்யாஞானையவந்
தான்
முக்குணமற்றதோர்மூலப்ரகிர்தியாமுன்னவள்தன்வடிவைக்
கண்டு
நிற்குணநிர்மலநீலகண்டத்தொடும் நேரிணையாகிவந்தான்
ஒன்றும்
பாசமில்லாள்பாசமோடங்குசந்தூக்கிப்பாரில்வடிவங்
கொண்டாள்
ஆசையில்லாளுசையாகிக்காமாக்ஷியருமணமாலைகொண்
டாள்.

வேறு. ஆநந்தபைரவி

ஆதிபராசத்திமஹாதேவிசங்கரி யிந்த
அண்டமெல்லாமீன்றளிக்குமன்னை சுந்தரி
ஜோதிலலிதேசுவரிகாமேசர்மோகினி முகச்
சுந்தரபுன்சிரி நமக்கருள்புரியவே
தேவர்களும் முனிவர்களுஞ் சித்தரும்போற்று மணிச்
செஞ்சிலம்பிலங்குபாதஞ்சிறந்துகாக்கவே
காரணங்கடந்தபரிபூரணியாகுஞ் சிவ
காமினிகருணைவிழி கலியகற்றவே

வேறு. நவரஸ்

காமாக்ஷிகருணாகரிநீயே மனமிரங்கிக்
கவலையெலாந்தீர்த்தருள்சேய்வாயே
காமேச்வரரங்கமேவுந்தாயே உன்னையல்லால்
கதிவேறெங்குங்காணேம்பாலிப்பாயே

ஹேமகுடாபரணசோபிதாங்கிட
பரமேச்வரிசுந்தரிசிவமோகனாங்கி,
சீர்மருவுஞ்சிந்தாமணிக்ரகநிலையே
பரதேவிபரஞ்சோதி பராசக்திமாயே.
பொன்மணியிழைத்த பாதசரமும் அம்மிமிதிக்கப்
புராஹரன்கைதொட்டபாதாம்புயமும்
நின்மலவுடைசேருஞ்சிற்றிடையும் சுழிநாபியும்
நீலமணிபோலேரோமாவளியும்
விம்மிமிகுந்தெழுந்தகுரும்பைஸ்தனமும் மணம்
வீசுங்களபகஸ்தூரிபூணேந்தமார்பும்
நன்மணிமோகனமாலைமுத்துச்சரமுஞ் செங்கை
நளினத்துக்கிசைந்தமாணிக்கவளையும்.

கொஞ்சும் பச்சக்கிளிபோலேமொழியும் கனிந்தினிய
கோவ்வைவாயிதழுநீண்டவிழியும்
குஞ்சிதரோமங்குலாவுநுதலுங் கஸ்தூரிப்பொட்டும்
கொண்டிலகுந்திருமுகத்தழகும்
கஞ்சமலர்மாலையுங்கருங்குழலும் மலர்க்
கருணையுங்கரும்புவில்லும் பாசாங்குசமும்
புஞ்சிரியுங்கொண்டுலகையாளவந்தாள் பரம்
பொருள்பரமன்மடியில் வாழ்ந்திருந்தாள்.

வேறு. குறுஞ்சி.

ஈசனைநோக்கிமெல்லப் பர மீச்வரியீதுரைத்தாள்
ஆசையில்லாரெனப்பேரிட்டதாருமக்காசையேவாழ்விடங்
காண்
ஈசனுமீதுசொல்வான் பரமீச்வரியுன்னைமோக
பாசமில்லாதவளென்றதார்ஜகமோகபாசம் பிடித்தவணீ

காமனையுமெரித்தீர் மாத காமமகன்றீரென்று
நாமம்பெற்றீரந்தஞாயம் வெளியாயின்றுயிரங்காமன்
கொண்டீர்
காமமில்லாளென்றும் வேறு கட்டுக்கடங்காளென்றும்
நீமொழிந்ததிப்போ நேரேவெளியாக நின்கண்கள்சொல்லு
மடி

வேறு. ஹிந்துஸ்தானி காப்பி

திருமகளஞ்சுமழகினிய சிற்றிடைமாதுமைநெற்றிவிழி
பரமனைப்பற்றித்தொடர்ந்திருக்கும் பண்பானசேர்வையைப்
பார்க்கவாரீர் பவத் துன்பங்களெல்லாந்தொலைக்கவாரீர்
பூவும்மணமும்பொருந்தியபோற்புரமூன்றெரித்தபுனிதனேடும்
தேவியமர்ந்திருக்குமழகைத் தேர்ந்துமனந்தரிசிக்கவாரீர்
நன்மை சேர்ந்து நாமெல்லாஞ்சுசிக்கவாரீர்

விண்ணுறைவெண்கனத்தில்விளங்கும் மின்னற்கோடிபோல
மன்னிநிற்கும்
புண்ணியரூபிணிபொற்பதத்தைப் பூமலரிட்டுப்புகழவாரீர்
பாடி நாமலரிட்டுமகிழவாரீர்
பேணும்மறைகட்குங்காணரிய பெரிய பொருளானசித்ரூபம்
ஆணும்பெண்ணுமாயமர்ந்திருக்கு மதிசயந்தன்னையுங்காண
வாரீர்
கண்டு துதிசெய்துமங்களம் பூணவாரீர்

கப்பல் இராகம்—புன்னுவெராளி தாளம் ரூபகசாய்ப்பு

சிவசம்போ மஹாதேவா-சிவோஹம்-சிவசம்போமஹாதேவா
ஆதியந்தமில்லாதா யருணி-ராலம்பக்கடல்மீது
மாதுமையாள் வகுத்தக்கப்பல் சிவோஹம்வா சாமகோச
ரமாம்
ஜோதிமதிக்கொடிவிரித்து சிவோஹம் சுகதுக்க மரநிறுத்திப்
பூதலமோரீரேழுதட்டுகணிரத்திப்
பூமிமுதலாம்பூதவெளிநிரைபொருத்தி,
ஆதரவுசெய்திடவுமாறறைதிருத்தி
யாங்காங்கு சூத்திரங்கள்பலதிருத்தி
சாதிபேதப்பலசக்குகள் நிறைத்து
சரியானபோகவிஷயங்களுமிறைத்துப்
பாதைபலதாய்வைத்தபல்கணிகள் காட்டும்
பரிசுற்றகப்பலிதுபரதேவியோட்டும் சிவசம்போ

பரைசுகுரியமாப்பிள்ளை தான் சிவோஹம் பலசரக்கின் முதலாளி
மரக்கலத்தின்சரக்குவகை சிவோஹம் மறைகளுக்குமளப்பரிதாம்
உரைக்கொணுதவிசித்திரமாய் சிவோஹம்உள்ளபாவையனந்தமுண்டு
இருக்குமுருப்பறக்கு நடக்குமவையெல்லாம்
இன்பதுன்பங்களையுண்டிறக்கும்பின்துனும்பிறக்கும்
சரிக்குமவைகளின் விருத்திபார்க்கில்வெகுபுதுமை
தளராதசாஸ்திரங்கள் சூத்திரங்கள்பெருமை
விரிக்குஞ்சுகமளிக்கும் பொருள்மிகவுண்டுதருமெப்
வேண்டவையெல்லாம் வேண்டிவாங்கலாமுண்மை
புரக்கும்பலமருந்துகளும் பண்டிதரும்சேரும்
பூரணன்விளையாடுங்கப்பலிதுபாரும்- சிவசம்போ

ஒப்பரியவுடையாய சிவோஹம் உச்சிதட்டின்மீதுறைவர்
செப்பணையமுலைமாதின் சிவோஹம் சேர்க்கையொடுமருள்புரிவர்
அப்பரிசாளர்கள்பலவும் சிவோஹம் அவனிடும்வேலைகள்புரிவர்
விற்பனைக்காறருண்டு வேண்டவையளிப்பார்
வீரர்பலருண்டு முறைதவறின்சிதைப்பார்
கப்பலின்காவலர்களுண்டு விழித்திருப்பார்
காணுமிவெவ்வகையுங் கர்த்தனறிந்திருப்பார்
சிற்பரன்றிருநீல கண்டர்க்குமுன்ஞல்
ஸ்த்ரீ தனக்கப்பலிது தெரிவீர்களின்ஞள்
அற்புதமரக்கலமீதறிவார்களெல்லாம்
அரனுண்மைதேறி யடைவார் பரானந்தம்- சிவசம்போ

வேறு. இராகம்-எதுகுலகாம்போதி தாளம்-ஆதி

ஒன்றுக்குளொன்ருயுருவங்காட்டா
வுலகமெதுமாயுயிர்க்குயிராய்
என்றைக்குமுன்னபரம்பொருளே
எங்கள்சிவசக்தியே-எச்சரிகா
வேதமுடிவில்விரித்தோங்கும்
மெய்யுக்குள்மெய்யாய் விளங்கிநாளும்
போதவடிவாய்ப்பொலிந்துமேவும்
பூரணனந்தமே-எச்சரிகா

அம்பர்மனத்துறையாரமுதே
ஆனந்தமான பெருவெள்ளமே
துன்பந்தணிக்கும்பெருந்துறையே
தூய்மாணிக்கக்குன்றே-எச்சரிகா
மெய்மைதழைந்தவிரிசுடரே
வேண்டதெவாந்தரும்விண்பொருளே
மைமணிகந்தரனோடருளி
வந்தாண்டருள்பரையே-எச்சரிகா.

வேறு. இராகம்-மத்தியமாவதி.

பேசிக்குலாவிப்பெருமோகந்தேடி மாசகன்றன்பாகி மஞ்சநீராடி
மாதர்பலர்சூழ்ந்துமங்களம்பாடி நாதனும்நாயகியுமொன்றுகூடி
தாளங்கள் மேளங்கள் சங்கீதமெல்லாம்
நீளங்கொள்கடல்போலே நெரிபடமெல்ல
மாணிக்க ஸிம்மாஸனங்கொண்டு வாழ்ந்தார்
காணிக்கையாய்வானோர்கழலிணை பணிந்தார்.

—0—

விருத்தம்

விதிமுறைவிவா ஹம்முற்றும் விதியின்சொல்வழிநடத்தி
விளங்குதமபதிகடம்மைத் துலங்குசிங்கணையிருத்தி
கதிர்மணிக்குடைநிழலற்ற மதியொள்ர்கவரிவீசக்
கரிபரிதேர்கள்சூழவரியயன் முதலோர்கூடிப்
புதுமணிமகுமஞ்சூட்டி மதுமலரிறைத்துவாழ்த்திப்
புனிதநீர்க்கடங்களேந்தியினிதுலகாள்வீரென்ன
மதுரவாய்மொழிகாமேசர் காமேசிதமக்குவேதன்
மாலயன் வானோரெல்லாம் மகுடாபிஷேகஞ்செய்தார்

கீர்த்தனம். இராகம்—பூர்விகல்யாணி தாளம்—ஆதி

பல்லவி

அபிஷேகங்கொண்டருளினார் ஆனந்தமோடும்

அனுபல்லவி

அபிஷேகங்கொண்டு சிவகாமிகாமேசர்சேர்ந்தே
அமரர்பதிக்குநிகராகுஞ்சீபுரம் வாழ்ந்தே— அபிஷே

சரணங்கள்

கண்டுவேதன்மதித்தகரும்புவில்லொன்றளித்தான்
கமலநாபன்பூவாளிநல்கிமனங்களித்தான்
தண்டிவருணன்நாகபாசமதுகொடுத்தான்
அங்குசம்முடிவிச்வகர்மாவன்னிகொடுத்தான்
ரண்டுதாடங்கம்ரவிமதியிருத்தினான்
ரத்தினமாலைகள்வருணனும்பொருத்தினான்
அண்டர்கோனும்மதுபாத்திரந்தொலக்கினான்
அளகேசனுஞ்சிந்தாமணியினுல்விளக்கினுன்— அபிஷேக
திருமால்பின்னுஞ்சோதிசிறந்தச்சத்திரந்தந்தான்
தெளிந்தகங்கையமுனைசாமரையீந்துவந்தார்
பிரமன்வசுருத்திரராதித்தர்திக்பாலகர்
பின்னுளதேவர்தங்களாயுதமெல்லாம்நல்க
பெருந்துரகங்கரியுயர்ந்ததேர்பின்னும்
பெருத்தபடைகளுங்கொடுத்தானயனமன்னும்
பரங்கருணையொடுசிறந்ததேவிபெற்றும்
படைகளுடனேசிவபரனுடன்மகிழ்வுற்றும்— அபிஷேக
மாதவர்வானோர் சூழவான்மாதர்நடமாட
மங்களாலத்தியேந்திப்பெண்களெங்குங்கொண்டாட
ஜோதிவிமானமேறி வீதிகடோறும்மெல்ல
சுந்தரிவலம்வரக்கந்தர்வர்கீதஞ்சொல்ல
நீதமாய்முப்புவனங்கள் தெளிந்திட
நிறைந்தமணமலர்மரர்கள்பொழிந்திட
ஆதிபராசக்தியன்னையினருள்சேர
அண்டர்முனிவரர்கள் கண்டு மனதுதேர— அபிஷேக

விருத்தம்

உலகத்துக்கரசியாகியோர்பதினாயிரத்தாண்
டுத்தமியத்தனேடுமப்பதியிருந்தபின்னாட்
கலகத்துக்கின்பமுற்றநாரதர்சென்றுபோற்றிக்
களங்கிலாப்பிரமமாகிநிறைந்தநீயெனிலிமின்னுள்
மலமுற்றபொல்லாப்பண்டதானவன்றனைவென்றுந்தன்
மலரடித்தொண்டுசெய்யும்வானவர் தம்மைக்காக்கும்

நிலையுற்ற கருணையேயிவ்வுருக்கொடுவந்ததாலே
நின்னருள்புரிவாயென்னவன்னையோடறிக்கைசெய்வார்

கீர்த்தனம். இராகம்—கானடா தாளம்—ரூபகம்

பல்லவி

தாயேயருள்வாயே எங்கள் தாயேயருள்வாயே—

அனுபல்லவி

நீயெயன்றிக்கதிகாணோம் நின்னடியேர்க்கின்றுலகில்

சரணங்கள்

பண்டாசுரன்மூவுலகும் மண்டிக்கொண்டானவனாலே
தண்டமுறுத்தமரரெலாமுண்டதுன்பமொருக்காலே— தாயே
உருத்தெரியாவுயிர்க்குயிராய்ப் பெருத்தபொருளென்பதுநீ
உருத்தரித்திவ்வுலகாளும்விருத்தியதுங்கொண்டவணி—
தாயே
மண்ணிலுள்ளதுட்டர்வதை பண்ணிநல்லோர்க்காதரிப்பாய்
உன்னடியார்தேவர்கட்காயுன்னத தானவரொழிப்பாய்—
தாயே

விருத்தம்

நாரதர்சொற்கிரங்கி நாயகியாணையாலே
வீரசேனகளாயங்கு மேவினர்தேவரெல்லாம்
போரினுக்குரியபேரி பூரிமத்தளங்கள்மற்றும்
வாரிதிபோல்முழங்க மாதேவிபோர்க்கெழுந்தாள்.

கீர்த்தனம். இராகம்—வஸந்தா தாளம்—ஆதி

பல்லவி

தெவியெழுந்தருளினாள் லளிதாபர-தேவியெழுந்தருளினாள்

அனுபல்லவி

ஆவல்மிகுந்த மகாதேவனுடனேபார்க்குள்
அண்டர்வைரியாகிய பண்டதானவன்போர்க்குத்
தேவர்பூமலர்போடவும் வெகு பாவையர் கண்டமாடவும்
தேர்க்கொடிகள் முகில்கீறவும் பெரும் போர்க்குதிரையணி
சேரவும்பர—தேவி

சரணங்கள்

மத்தளம்மோடக்காளம் யுத்தபேரியதுங்க
மற்றும்மேளதாளங்கள் சுற்றும்வானம்புதுங்கக்
சுத்திகடாரிசூலம்வெற்றி வேல்கள் தொலங்கக்
கைப்பரசிட்டிகுந்தம் விற்படைகளிலங்கச்
சத்திரங்கொடிசாமரங்கள் விசித்திரங்கள்மிகுந்த பலவகை
தாலவட்டமுமாலவட்டமுங் கோலமுற்றிருபாற்றெரு
டர்ந்திட—தேவி
அங்குசந்தன்னின்றும் சம்பத்கரியுதிக்க
ஆணைப்படைச்சத்திகள் கோடியோடுங்குதிக்கத்
தங்கும்பாசத்திலச்வா ரூடைவந்தளவில்லாச்
சாடுங்குதிரைப்படைச் சத்திகளொடுஞ்செல்லக்
கண்களிற்பொறிகாட்டியே வெகு-துங்ககரிபரியோட்டியே
கச்சைவாள்களிறுக்கியேபோர்க் கிச்சையோடிடி
போலுறுக்கியே—தேவி
வானமுகிலணையயானை மேற்சத்திகோடி
வாயுவேகப்பரிமேற் சாயுஞ்சத்திகள்கோடி
வானம்முழங்கும்மேள தாளசத்திகள்கோடி
வட்டவெண்குடைகோடி நீட்டுஞ்சத்திகள்கோடி
ஆனதுந்துமிவிக்குவார்கோடிபானமதுக்குடந்தூக்குவார்
கோடி
ஆயுதங்களெடுத்தேகுவார்கோடி பாயுஞ்சத்திகள்கோடி
[கோடிசூழத்—தேவி

விருத்தம்

கருமுகில்பிழிந்துநிருண்டிடுபெருமலையையொத்த
கரிகள்மேல்மருவுசத்திகணங்களைக்கதிநடத்திப்
பெருமலையானையேறியிருமலையரசிமேரும்
பெருவொலிகொண்டுஸம்பத்கரிகட்கமேந்திச்செல்ல
இருசிறகெனவும்வெண்சாமரையிருபுறத்துமாட
ஏகயசத்தமிட்டாகாசமுஞ்சஞ்சரிக்கும்
புரவிசேர்சத்திசேனைத்திரள்களையணிநிரத்திப்
பொன்பிரய்பேந்தியச்வாரூடையும்பரிமேற்சென்றாள்

தண்டகம்

செங்கனலணையகண்களொடு சிறுசிங்கமசிரமுகத்தொடுஞ்
செங்கைநாலுவிளங்கமுத்தலேதிகமுஞ்சூலாதிகளொடும்
பிங்கசாமளநீலநிறவுடலங்களோடுபயங்கரம்
பெருகவந்தொருகோடிசத்திகள் பின்னுமுன்னும்வளைந்திட
துங்கமைமலையென்னவும் வெகுசூகரான்னசத்திகள்
தொடரவுங்குடைகோடிசாமரைசூழவுங்கிரிசக்கிரம்
தங்குமணிகளிலங்குதேர்மிசைதங்கியேவாராகியாம்
தண்டநாயகிதண்டமேந்திவநதருளினான் ஸமயேச்வரி.

கீர்த்தனம். இராகம்-தனுசி தாளம்—ஆதி

பல்லவி

தண்டநாதையென்னுஞ் சிறந்தவாராகி தேவியெழுந்
தருளினான்

அனுபல்லவி

அண்டரும்முனிவருங்கண்டுபயந்தொதுங்க
அட்டகாஸமெண்டிசைமுட்டித்தறையதுங்க— தண்ட

சரணங்கள்

எல்லையிற்சத்திசேனைக் கெல்லாம்நாயகியாகி
இருபிறையென்னுந்தீட்சண யியற்றெருடுங்கூரமாகிப்
பல்லைநெரித்துச்சீறிப் பைரவிரூபமாகிப்
பாய்ந்துசிங்கத்திலேறிப் படைக்கடல்வலமாகி - தண்ட
படைமுகங்கொண்டுசத்திப் படைகள்பரந்திலங்கப்
படகத்தொனிகடல்போற் பாய்ந்துதிசைகலங்கத்
திடமுறுஞ்சத்திசேனைத் திரளொதுங்கித்தொலங்கச்
செய்துபிரம்பசைத்துச் சிங்கமீதும்விளங்க- தண்ட

விருத்தம்

ஐந்தாவரணத்தொடுமுயர்விண்ணளவாயபெருஞ்சோதி
பெறுஞ்
சிந்தாமணிசெய்கிரிசக்றத்தேரின்மிசைவாராகியெனும்
எந்தாயவளும்வந்தபினேயேழாவரணத்தோடுஜயம்
தந்தாள்கயசக்றத்தேர்மேற்ருய்மந்த்ரிணியும்வரலானுள்.

கீர்த்தனம் இராகம்—காம்போதி தாளம்—ஆதி

பல்லவி

சங்கீதயோகினிசிவ சங்கரிமந்தரிணியான
சாமளைவந்துதித்தாள்

அனுபல்லவி

சிங்காரவடிவமோடுஞ்செங்கரத்தில்வீணையோடும்
அங்குசபாசாதியோடும்மங்கள தேவிமாரோடும்— சங்கீத

சரணங்கள்

காகளமிர்தங்கதாளமேளமோடுங்கோகிலம்போற்
கானநடனவிநோதசத்திகள்சூழ
மாகருணையோடுசுகபாணியாகிசோதிமணி
மாலைசூடிமகாதேவியருள்பாடிவிளையாடி— சங்கீத

பாலவடிவாய்சாமளரூபபோடும்மதுமத்தப்
பார்வையோடும்பலசத்திவந்துபணிய
நீலவிற்புருவிலாஸச்சேலினிற்சேனையடக்கி
நீண்டவிழிரண்டும்மதுவுண்டமதம்பூண்டுநோக்கி- சங்கீத

உத்தமிகாளாவரணசத்திபலர்சூழ்ந்திலகு
முன்னதகயசக்கிரத்தேர்நடுவிற்
புத்தமுதமுண்டோர்சிறுதந்தை விளையாடுவது
போலமணியாபரணமாலையலங்காரசீல— சங்கீத

---

விருத்தம்

சாமளாகைபிற்றங்குகோமளகசுத்தினின்று
தனுவேதம்வந்துதோன்றித்தனுவாளிதரவும்வாங்கிப்
பாமரவசுரர்தம்மையேமனூரனுப்பவெண்ணிப்
பாணியில்வில்வளைத்துஞாணொலியிட்டபோதிற்
பூமியும்வானுமெல்லாம்போய்முழங்கிடவுந்தேவி
போர்க்கனுரூபவேடச்சேர்க்கையுங்கொண்டுகாளி
யாமெனக்கண்கள்காட்டிப்பாயுமாயிரமக்ரேணி
யானசேனைகண்டத்தித்தானவர்புரிக்கெழுந்தாள்.

சந்தவிருத்தம்

ஒருபதுயோசனைவிரிநிழல் தருமதி
கதிரவனெனவெண்குடையிசைய
உயர்கிரிமேல்விழுமருவிகளெனவிரு
புறமொளிர்கவரிகள்கொடியசைய

அருமணமாமலரமரர்கள்சிதறிட
வழகியமாதர்கண்டமாட
அலைகடல்போலொலிமேளமுழங்கிட
வன்பொடுமுனிவர்கள்கொண்டாட

திருவுறைமார்பனுடையனரன்மாவிடை
சித்தவித்யாதரர்முதல்யாரும்
திருவருள்வேண்டவுமொருபதினயிர
மிரயுவிதித்துபோனேரும்

பெருமணிமாதிகளொடுபலசக்திகள்
தொழுதுறையொன்பாமாவரணப்
பெருரதமேலருள்பரை யெழுகடல்கரை
மறிவதெனப்படையொடுசென்றாள்.

கண்ணிகள். இராகம்—சகன தாளம்-ரூபகசாய்ப்பு

சென்றாள்வெகுசேனைகளோடொன்றுகவேதேவி
திரையேழொடுகடலேழெதிர் வரும்போலவேதாவி
மன்றாடிடுபரன்சாக்ஷிணி சிம்மாஸினிலளிதா
மாகேச்வரிகாமேச்வரி சக்றேச்வரியெளிதாய்
பண்டாசுரன்றனைவெல்லவும் பாசாங்குசபாணி
பாணதனுவோடுஞ் செல்லலாளுள்கல்யாணி
அன்றுயிர்மகேஷாகிணிப்படையோடுநடந்தாள்
அலரிட்டமரேசன்முதலானோர்கள் தொடர்ந்தார்
ஸ்ரீசக்கிரமெனும்வானுயர் தேரைக்காவல்கொண்டு
தேவிசாமனைமேவிய கயசக்கிரங்கண்டு
பாசக்கரசூலப்படை வாராகியுங்கூடிப்
பாயுங்கிரிசக்ரமொடு தாயஞ்செலநாடி

பாரிற்சுடர்மூன்றும்வருவது போல்முத்தேரும்
பரியிரத்திடநெடுவோன் முகிற்கொடியேற்றிடவூரும்
பொரிற்பொலிவுறுவாரண முதல்வாகனமடைந்தார்
புகைசேர்விழிமிகுசத்திகள் வெகுசேனைகளடைந்தார்.

---

விருத்தம்

என்றயவதனன் பின்னுமிவர்மணித் தேர்மூன்றுக்கும்
நின்றவாவரண சத்திநிலைமைகள் மொழிந்துதேவி
சென்றிடவசுரநாட்டிற் றீதவசகுனங்கண்ட
பின்றொடர்கதையுமப்பாற் பெருந்தவர்க்கோதுவாரே

கீர்த்தனம். இராகம்-முகாரி தாளம்—ஆதி

பல்லவி

அவசகுனம்பலகண்டார் கண்-டசுரகெலாம்பயங்கொண்டார்

அனுபல்லவி

நவமணிமாளிகை முதலாகவிவரித்து
நகர்மயன்செய்தசுரர் வாழுஞ்சூன்யபுரத்துள்— அவசகு

சரணம்

ஏதுவில்லாமல்மதி லிடிந்திற்களழிவதும்
எங்கும்நாய்நரிகூடி யூளையிட்டழுவதும்
மாதர்களாவரணந் தானேகீழ்விழுவதும்
மாநகரெல்லாம்மறைபடத் தூமமெழுவதும்
மாரிபோலவே சோரிபெய்யவு
மூருளோர்பயந் தோங்கிநையவும்
பார்க்கிடுங்கவுநகரார் நடுங்கவுமென்ன
போர்துலங்குமோவென்று மனங்கலங்கவுமன்
ஞள்— அவசகு

விருத்தம்

துலங்குசதயோசனைவிரிந்தசுரர்நிறைவுற்ற
சூன்னியபுரத்திலன்றுட்
கலங்குறவிளைதவிந்துன்னிமித்தங்களைக்கண்டு
பண்டனுமயங்கி

இலங்குசபைசென்றசுரசூரர் பலசூழவே
யீதென்னகாலமென்றே
கலங்குபொழுதோர்தம்பியாகியவிசுக்கிறன்
கைகூப்பியீதுரைப்பான்.

கீர்த்தனம். இராகம்-தர்பார் தாளம்-சாய்ப்பு

பல்லவி

அசுரேச்வராகேளும் நானறிந்ததை அசுரேச்வராகேளும்

அனுபல்லவி

கொசுவாகியதேவர் வசமாயொருமாது
கொடியர்நம்மொடுபோர்க்குமுடுகினளாமிப்போது

சரணங்கள்

கருங்கல்லையுடைத்திடச்சருகுகளெதிர்த்தாப்போற்
கஷ்டம்நம்முடன்போர்க்குப்பெட்டைகளெதிர்த்தசேல்
பெருங்கைவீரமுடைய புருடர்களவர் முன்னே
பெருஞ்சண்டையிடுவதுங்குறையன்றேநமக்கண்ணே
—அசுரே

அபலையாகியபெண்களாயுதங்கள்கொண்டின்று
அசுரர்களைஜயிக்கவருவதுநன்றுநன்று
சபலைகள்பரிகாசஞ்செய்யவல்லவோகண்டு
தானவர்போர்க்குவரலானார்மானமேதுண்டு— அசுரே
அரியயனரன்முதலானோரையுஞ்சயித்தேன்
அசுரர்கள்திசையுளார்நடுங்கியோடவிடுத்தேன்
பரிகாஸஞ்செய்யவரும்நாரிகளைப்பிடிப்பேன்
பணிவிடைசெய்யவுந்தனிணையடிகொண்டுவைப்பேன்
—அசுரே

விருத்தம்

இன்னவகைவிசுக்கிரனியம்பவும்மற்
றிளையவன்விஷங்கனுமெழுந்துகூப்பி
மன்னவாபலாபலமறிந்துநன்றாய்
மதியுடையமந்திரிகளோடுங்கூடி
நன்னயமாயோசனைகள்செய்துதேறி
நமக்கெதும்விபத்துவராவண்ணங்கண்டு
முன்னெழுந்தபகைவரொடுபோர்க்குச்செல்லும்
முறையன்றோவசுரர்பெருந்துறையென்றனே.

கீர்த்தனம். இராகம்—காம்போதி தாளம்—ரூபகம்

பல்லவி.

நீதியல்லண்ணே இந்தயோசனை நீதியல்லண்ணே

அனுபல்லவி

ஓதுமாறுபாயங்கள்தேடிப் போதமந்திரிமாரொடுங்கூடி
யோசியாமற்கூசிடாமலுரம் பேசுவதுமரசர்கட்கிது-
நீதியல்

சரணம்

அடுத்தபகைவாமாதர்களென்றுமவதித்தல்கூடாது
அனர்த்தகாலத்துக்கெதுவும் போருக்குப்பலத்திடும்புவிமீது
எடுத்துரைத்திடவேணுமோமுன்மகிடமதுகைடபாதி
எதிரிலாசும்பநிசும்பர்கள்மாண்டார்மாதர்கள்போரிற்போய்
மோதி

தடுத்துநின்றமர்செய்வார் சத்தியிலாரலியாவார்
சகத்திற்சத்தியேயுருவாயெவர்க்கும் வீரமென்றறிவாய்
தையலின்றுபாயமென்றுதள்ளிவெற்றிகொள்ளும்புத்தி—
நீதியல்

விருத்தம்

நயந்திவைமற்றும்நீதி நவின்றதோர்தம்பிசொற்கேட்
டயந்தவன்நீயென்றேசி யசுரேசன்சினந்துசீறிப்
பயந்தெனக்கமரர் மூவர் பதுங்கினர்தலைநீட்டாதே
ஜயம்பெறுமெனக்குமாதர்செருக்கொருபொருட்டோவென்
பான்

கீர்த்தனம். இராகம்—தோடி தாளம்—ஆதி

பல்லவி

எனதுபராக்ரமந்தெரியாமல்
இப்படியுரைத்தேனறியாமல்

அனுபல்லவி

உனதுதுற்புத்தியாலேயுரைத்திட்டாய்பயம்மேவி
உலகிலெனைச்சயிக்கவொருவருண்டோடாபாவி-எனது

சரணங்கள்

வன்னியினின்றெருருலளிதையெனும்
மலர்போலும்மெலிவானமேனியோடும்
கன்னிகையுதித்தனளென்றறிந்தேன்
கரும்புவிற்பூவாளியாமதுந்தெரிந்தேன்

அன்னவட்கென்னபலமையய்யோபெண்சபலம்
பின்னுமவட்குச்சேனைப்பெண்கள்பெருங்கூட்டமாம்— எனது

பூங்கொடிபோலாகும்மாதரிவர்
போர்முகத்துக்கெதிராகுவரோ
தேங்கனிபோலுண்பாரவரையெந்தன்
சேனைகட்கீதொருலட்சியமோ
ஏங்கியெனக்குப்பயந்தெண்டிசைநாதர்களும்
தூங்கிக்கிடக்குருர்கள்தோகையர்க்கஞ்சுவேனே— எனது

மண்டலத்தரசர்கள்வாழ்வகன்று
மலைகளுங்குகைகளும்போயொளித்தார்
அண்டருரகர்சித்தர்சாத்தியரும்
மயனரியுருத்திரர்கிடுகிடுத்தார்
பண்டனென்றபேர்சொன்னுற்பதினுலுலகும்வாடும்
பெண்டுகட்குப்பயந்தபேதைநானுகுவேனே— எனது

விருத்தம்

தேவர்கோன்முதலாய தேவரும் மூவருந்
திசைமாறியோடும் வண்ணம்
செருக்களம் நின்றுபோரிற் பெருமைபெறுமெனது
ஸேனுதிபதிகளாகும்
கோவமேகுடிகொண்ட குடிலாட்சன் மதமுள
குரண்டன்கரங்கன்வைரி
குலங்குலைபுரிந்திடும் காகவாசிதன்வச்சிர
தந்தன்வச்சிரமுகத்தோன்
காவல்பரியும்வச்சிரலோமன்வலாககன்
கட்கிவாகன்கராளன்
கரடகன்சூசிமுகனரவின்முகனுலுமல்லன்
கல்க்கஸன்புல்க்கஸன்முதல்
ஏவல்கேட்டிடுவோரிரண்யகசுபுக் குநிக
ரெண்ணரியரிடவன்றியும்
இரண்யாட்சனையொத்தவென்மக்களவர் ம்க்
களுண்டெனப்பினுமிசைப்பான்.

சண்ணிகள். இராகம்—ஆனந்தபைரவி தாளம்—ஆதி

அண்டம்பிண்டகரஞ்செய்திடுவோர்
அசுரப்படைத்தலைவராயிரம்பேர்
உண்டவர்க்கோரோவக்ஷோகிணிவீரர்
ஓராயிரம்படைத்திரளுஞ்சூரர்
சங்கையேதடாதம்பியெனக்கூறிச்
சண்டன்பண்டாசுரன்சினந்துசீறி
சிங்கநிலை நின்றெழுந்துசிலரேவி
சேனைத்தலைவர்களைவரக்கூவி
கத்துங்கடற்போற்படைசேருவித்தான்
கடும்போர்க்குபடகங்கள்முழக்கிவித்தான்
கொத்தளங்கோட்டையெல்லாங்காவல்வைத்தான்
கோரதானவர்கூட்டம்கூடுவித்தான்
பட்டணம்முற்றுநன்றாய்க்காருமென்றான்
படைத்தலைவரேயுங்கள் பொறுப்பிதென்றான்
எட்டுத்திக்குஞ்சயித்தவுங்கட்கிந்த
வேளைப்பெண்படையென்றேதிடம்மொழிந்தான்.

விருத்தம்

இக்கணமொருநூற்க்ஷோகிணிப்படையெடுத்துச்சென்று
மைக்கணிமடவார்சூழ்ந்தலளிதைமாதினைப்பிடித்துத்
திக்குகள்புகழுமாறுவென்றிசேர்கொண்டுவாபோ
ருக்கெனக்குடிலக்கண்ணனோடவனுரைக்கச்சென்றான்.

கீர்த்தனம். இராகம்—பைரவி தாளம்—சாய்ப்பு

பல்லவி

தீயகுடிலாக்ஷன் போர்க்குமுறையிட்டான்
அசுரேசன்சொற்கேட்டுத்- தீயகுடிலா

அனுபல்லவி

ஆயிரமக்ரோணிசேனைகட்கதிப
னாமையமிகுந்தானவனுகியத்- தீயகுடிலா

சரணங்கள்

ஆழிகள் முழங்கியெழுந்தவதுபோலே
யானைபரிதேர்களோடுஞ்சத்திசேனை

சூழநிறைந்ததுகீழவாசல்சென்று
துர்மதனுடனேகண்டு
ஏழுமதில்சூழ்ந்தசூனியநகரத்
தீரிரண்டுகோட்டைவாசல்களுங்காவ
லாளாய்நாலுபத்தக்ஷோகிணிவகுத்த
அந்தரங்காவலோடன்பதாய்ததிகைத்துத்— தீயகுடி

ஒருபதக்ஷோகணிச்சேனையுடன் முன்னே
உகந்துதர்மதனைவிருந்தெனவிடுத்தான்
கருமலைபோலெதிர்த்தசுரர்போர்தொடுத்தார்
கணைகள்பலபடைவீசி
பெருமைபெறுசத்திப்படைகளுந்தொடர்ந்து
பிணங்கள்விழத்தட்டிநிணங்கள்நெளிந்திட
இருபடையுங்கலந்தலறிப்போரிட
இரவிமுன்பணிபோலசுரர்தொலைந்திடத்— தீயகுடி

கண்களிற்கனல்கள்சொரிந்திடத்துர்மதன்
கணைவிடுத்துசத்திகணங்களையுமடித்
தங்கம்பிளந்ததிவீரப்போர்செய்தவ்
வசுரநேர்ந்திடவே
அங்கவனுடனேஸம்பத்கரிதேவி
அதிகரணகோலாகலயானையோடேகிப்
பொங்கும்வாளிபொழிந்துயிரைப்பலிகொள்ளப்
போனகைகாலொடுஞ்சிலர்கோட்டைக்குட்செல்ல-தீயகு

விருத்தம்

ஒருபதக்ஷோகிணிச்சேனையோடுமின்றைக்
குத்தமனேதுர்மதன்முன்னாகப்பொருக்
கரிவையர்பாற்சென்றன்னப்பாலிப்பாலோர்
அவசேஷங்காணேன்காணையாவென்றே
நிருபதிமுன்குடி லாட்சன்கூறக்கேட்டு
நிட்டூரமாதர்களைநீபோய்வென்று
வருகவெனக்குரண்டனெனுமசுரமாயா
வல்லவனையனுப்பியவன்போயெதிர்த்தான்.

கண்ணிகள். இராகம்-ஹிந்துஸ்தானிகாப்பி தாளம்—ரூபகசாய்ப்பு

போரிற்குரண்டனிருபதக்ஷோகிணிப்
பொல்லாப்படை-யோடும்போய்க்குதித்தான்
மாரிசொரிந்திடல்போலேமண்ணும்விண்ணும்
வாளிகள்வீசிவளைந்தெதிர்த்தான்
அட்டகாஸஞ்செய்தலறியசுரர்கள்
ஆலா கலம்போலேசூழ்ந்துசென்றார்
முட்டியுத்தங்கள்முசுண்டிமுசலங்கள்
மோதியுத்தங்கள்முயன்றுநின்றார்
ஆனைமுகத்தர்பரிமுகத்தர்பன்றி
யானனர்சிங்கமுகத்தர்பலர்
பூனைமுகத்தர்புலிமுகத்தர் நாய்கள்
போலுமுகத்தசுரர்கள்பலர்
நாகமுகத்தர்நரிமுகத்தர்மகி
டானனர்நானுவிதமுகத்தர்
காகமுகத்தர்பலர்சூழநின்று
கடினப்பெரும்போர்க்கடைவிரித்தார்
மத்தமதயானைவாசிகள்மேலேறி
மாயாவசுரப்படைதொடர்ந்தார்
சத்திரங்களோடுஞ்சண்டைக்குவந்தார்முன்
சம்பத்கரியாள்படையெதிர்ந்தார்
துன்மதனுமென்றுணைவனைக்கொன்றதோர்
துட்டயைக்கொல்வேனென்றேயெழுந்தான்
துன்மதியாகியமாயக்குரண்டனும்
துள்ளிக்குதிரையிபிலேறிவந்தான்

விருத்தம்

இருண்டமலைற்போலெதிர்ந்தகுரண்டனோடே
யினியவிளையாடலெனப்போர்செய்தற்காய்த்
தெருண்டமுலைமார்பழகியசுவாரூடை
சிந்தையோடுபோய்சம்பத்கரியைக்கேட்டே
அருண்டகடலெனப்பாயுமசுரசேனை
யமர்களத்திலுயர்புரவிப்படையோடேகி

மெருண்டவர்கள்தளர்ந்திடப்போர்செய்தன்றேனரை
விழுவித்தான்குரண்டனுயிர்கெடுவித்தாளே.

---

கீர்த்தனம். இராகம்-ஸாவேரி தாளம்-சாய்ப்பு

பல்லவி

ஒருநிமிஷத்திலசுவா ரூடைபோர்விளையாடி
யொழித்தாளசுரப்படையை

அனுபல்லவி

இருபதக்ஷோகிணிச்சேனைகளோடுஞ்சென்றே
எதிர்ந்துவாளிபொழிந்துகுரண்டாசுரனைக்கொன்றே—
ஒருநிமி

சரணம்

அஸ்திரசஸ்திரங்களலறியசுரர்வீசி
அசுவத்திலேறிவந்சத்திகள்மேற்சொரிய
எத்தியவர்களுடல்கத்திகளாலேவெட்டி
யிவரும்நின்றுபோர்புரிய
ஆத்திகுதிரை காலாளானைப்படைகளெல்லா
மலறியலறிவிழ்ந்தபிணம்பிணமாய்க்குவிய
அசுவசத்திகளாலேயிருபதக்ஷோகிணியு
மமர்செய்தாற்றுமல்வாடி யெமனுலகடைய
சித்தநொந்துசினந்துசீறியே
செங்கனற்படைமற்றுமெறிந்திட
மெத்தமாயைபுரிந்துகுரண்டனும்
வீரமகன்றுயிர்வாடியிறந்திட— ஒருநிமி

தண்டகவிருத்தம்

கடல்போல்மடவார் ஜயமேவிக் கனதுந்துமியிரைலி
செய்தார்
திடமாயச்வாரூடையிறைற்சென்றுனெமனுர்குரண்டனுமென்
றடல்போரவசேஷிகள்போயங்கசுரேசனிடத்தறிவித்தார்
படைநூறக்ஷோகணியோடும்படநாயகரைவரைவிட்டான்.

கண்ணிகள். இராகம்—நாகவராளி தாளம்-ஆதி

பண்டாசுரன்சீறியேவிவிட்ட
பாதகராங்கரங்கன்முதலாம்
வண்டார்மேனிப்படைத்தலைவரைவர்
மாயாவிகள்மதித்தோர்போர்க்கெழுந்தார்

ஆயிரங்கழுதைபூட்டியதேர்மேல்
ஆலாலம்போலேகரங்கனேறி
மாயம்மிகுந்தோன்சரங்கள்தூவி
வானோர்பயந்திடப்போர்தொடுத்தான்

காயம்பெருத்தொரு சேனைநாதன்
காகவாசிதனெனும் பேருடையான்
தீயகொடியோன் கரியிலேறி
தேவிபடையைக் கலங்கடித்தான்

வச்சிரதந்தனென்றோர் தலைவன்
வச்சிரபாணங் கரத்திலேந்தி
உச்சிதமான வொட்டகையேறி
யுல்லாசமாய்ப்போர்கள் செய்தெழுந்தான்

வச்சிரமுகனென்றோர் சேனைநாதன்
வாதுகூறியொருதேரிலேறி
கச்சணிசத்திப்படையைச்சீறிக்
கைக்குந்தத்தாலே யகக்கலானான்

வச்சிரலோமனென்றோர் தலைவன்
மாபலவானொருதேரிலேறி
அச்சமில்லாமல் வாளிகள்வீசி
யசுரப்படையோடுஞ்சென்றெதிர்த்தான்

சேனைத்தலைவரிவர்களைவர்
சீறிநூறக்ஷோகிணியசுரச்
சேனைகளோடுமமர்புரிந்தார்
செங்கனல்மாரிகளாய்ச் சொரிந்தார்

ஆனைகுதிரைதேர்சேனையாலே
யவனியொடிந்து செந்தூளெழும்பி
வானமளவும் பரந்துவிண்ணும்
மண்ணுந்தெரியாமற் போர்விளைத்தார்

விருத்தம்

அத்திரமழைபொழிந்தங் கைவர்களெதிர்த்தபோது
சத்திகள்தடுத்துநின்று தானவர்தமையடித்தார்
அத்தலைமாயையாலோ ரரவராக்ஷசியையன்னோர்
சத்திகள்படைக்குள்விட்டே சார்ந்தவள்போர்க்கெழுந்தாள்

கண்ணிகள். இராகம்-நாதநாமக்ரியை தாளம்-சாய்ப்பு

சற்பிணியென்றொருபேய். அந்தசத்திப்படைகள்முன்கத்தி
சென்றே
சற்பம்பலவகைக ளங்கு சாடுவித்தாள்விஷமோடெதிர்த்து
பாம்புப்படைதொடர வதை பார்த்தவர்கண்டுபயந்திடவே
பாம்புராக்ஷஸியவள் வாயைப் பாதாளம்போலதிறந்து
கொண்டு
தான்போமிடங்களெல்லாம் வெகுசற்பங்கள்நானுவகை
விடுத்தாள்
சூன்காணிவளெனவே யந்த துட்டவரக்கிதலையெடுத்தாள்
உடலமெலாம்பாம்பு அவ ளோடும்போதுதிரும்வெகுபாம்பு
கடல்வாயாலாலமென்ன விஷங்கக்கியெதிர்க்கும்வெகுபாம்பு
தோளில்வெகுபாம்பு வாயிற் றேன்றிக்குதித்திடும்வெகு
பாம்பு
காளிகாற்கோடனென வெகு காளரவங்கள்கணக்கிலதாய்
சற்பிணிகண்ணினின்றும் பின்னுஞ் சாடுங்கறுப்புஞ்சிகப்
புமுள
அற்புதப்பாம்பனேகம் தலை ஐந்துமூன்றுமிரண்டுமானதுவும்
இருதலைமணியங்களும் படமெடுத்தாடும்பன்னகசாதிகளும்
பெருமூச்செறிந்துவிஷமெங்கும்பெருகச்செய்யும்பெரும்
பாம்புகளும்
பாய்ந்துரணகளத்தை விஷப் பற்களொடுஞ்சீறிச்சத்திகளைக்
காய்ந்துகடித்திடவும் கண்டு கலங்கிமயங்கினர்சத்தியெலாம்.

விருத்தம்

வாசுகிமுதலோர்தம்மையீன்றகத்துருவைப்போல
வந்தசற்பிணியாற்றோன்றும்பன்னகத்திரளைக்கண்டு
தேசுவாளிகள் விடுத்துத்தெம்றிந்திடவிரட்டிமீண்டு
சீறாவிஷத்திறலேவாடியேசத்திசேனை
கூசினவேளைகண்டுநீசரைவர்கள்தொடர்ந்து
கூரவாளிகள்விடுத்துப்போரினிற்பொலிவுகொள்ள
ராஜராஜேசிதல்ஞுண்ணுக்கினினின்றப்போது
நகுலியாந்தேவிசெம்பொற்கருடனேடங்குதித்தாள்.

கீர்த்தனம் இராகம்—துஜாவந்தி தாளம்—ஆதி

பல்லவி

நகுலினிபடையெடுத்தாள் கருடன்மேற்கொண்
டசிவிஷங்களைக்கெடுத்தாள்.

அனுபல்லவி

சகலசத்திப்படையும்மயங்கித்தளர்ந்ததுகண்
டகமிரங்கியம்பிகையருள்புரியச்சிறந்த— நகுலினி

சரணங்கள்

அளவில்நகுலியந்தவாதிதேவியிற்ருேன்ற
அளவிற்கருடனந்தமுதற்கருடனித்தோன்ற
அளவிற்பாம்புகளெல்லாமவர்களாற்றெறிபட
அளவில்விஷஞ்சிதறியனைவருமெழுந்திட
பிளறுநாக்குடையவரவசிரோமணி
பெருஞ்சுடர்போலவுமிலங்கவுமேதினி
இளகிடுமரவுகட்கிருப்பிடமாயின
விருளெனுமரக்கியையொருகணைக்கிரையென-நகுலினி

முப்பத்திரண்டுகோடிப்பற்கள்காண்கவுஞ்சீறி
மோதுமசுரப்படைபோர்க்களந்தன்னிலேறி
ஒப்பற்றதேவியவளோர்பல்லுக்கோர்நகுலி
யுதித்தசுரரைப்பாய்ந்துகடித்துயிர்களைப்பலி
அற்புதமாய்க்கொளவொருநூறக்ஷோகிணி
யசுரர்களும்மாளவதின்பினக்காரணி
நிற்பயமாகிப்போர்செய்துபடைக்கத்தியால்
நீசரைவர்கள்தலைபூமிவிழக்கொத்தினள்— நகுலினி

விருத்தம்

மாவலசாலியாகுமைவரும்படைகளுங்கால்
மாடொடுதலைமாடாகிமாண்டிடுரக்தவெள்ளந்

தாவினதவைகளிர்த்துத்நடங்கடலொத்ததன்றுட்
    சைவலமசுரர்கேசம்மரக்கலந்தேர் கரிளன்றே
பாவிகளிவரைவென்றநகுலிமாதேவிதன்னைப்
    பணிந்துவானவர்புகழ்ந்தார்மகிழ்ந்துசத்திகள்தெளிந்தார்
கோவமுற்றசுரமன்னன்கேட்டுளம்பொறுக்காறுகிக்
    குடிலநேத்திறன்முன்சொல்லியெழுவரைப்போர்க்
                                        கழைத்தான்

கண்ணிகள் இராகம்—உசானி தாளம்—சாய்ப்பு

இலங்கைமன்னவன்போலே யேழுபேர்களைசேனைவீரர்
கலங்குமாறமரர்கட்குக் காலனென்னும்வலாககன்
போர்க்களத்தைத்துளைசெய்யும் பொல்லாவீரன்சூசிமுகன்
கார்முகிலின்மாரிபோலே கணைவீசும்பாலமுகன்
வேதசத்துருக்களான விகர்ணன்விகடானனன்
காதகர்களானபொல்லாக் கராளாக்ஷன்கரடகன்
சப்தசேனாதிபரிவர் சமரில்வெகுமாயாவீரர்
இத்தனைபெருஞ்சோதர ரேவராலும்போரிற்றேரார்.

விருத்தம்

வந்தவரேழுபேரும்மன்னனை வணங்கியன்றேன்
    வருதிபெற்றரவுபோல பெருவொலிமுச்செறிந்து
தந்திதேர்குதிரைகாலாள் தழைகுடைபேரிபூரிச்
    சங்கலியோடுமுப்பதக்குரோணிசேனைசூழக்
குந்தம்வாள்வலயமீட்டி கொடுங்கணைநெடுவில்மற்றுங்
    கொண்டுவாகனங்களேறிக் கொடியதானவர்கள்
                                        சென்றே
அந்தரம்பொடியெழும்ப வமர்க்களங்கிடுங்கிடுங்க
    வசுரருஞ்சத்திசேனை வீரரும்போரிட்டாரே.

கீர்த்தனம். இராகம்-தோடி. தாளம்—திருபுடை.

பல்லவி

அசுரப்படைகவரோடெதிர்ந்துசத்திமாதர்
அமர்க்களத்திற்சண்டைசெய்தார்.

அனுபல்லவி

கஜதுரகமேறியிருபடையுஞ்சீறிக்
கத்திகடாரியாற்குத்தியுடல்கீறி- அசுர

சரணங்கள்

அவரையிவர்வெட்ட யிவரையிவர்வெட்ட
அவர்வாளிவிடுக்க யிவரதைத்தடுக்க
அவரவர்திறங்களனைத்துமங்குகாட்டி
ஆயுதங்கள்தட்டித் தீயெழும்பமூட்டி அசுர

அற்புதவாளிகளவரிவர்க்குவிச
அதைத்தடுத்திவர்கள் விடுங்கணையாணிசர்
கைப்படையகன்று கவிழ்ந்துபுவிசாயக்
கரிபரியுருண்டு குருதிவெள்ளம்பாய அசுர

சூதுசெய்யசுரர் சூரமெதுங்கெடச்
சூலமுதலான வாயுதங்களுடன்
மோதுமிவர்கைகள் வீரமெதுங்கெட
முப்பதக்ஷோகணிப்படையும்பொடிபட அசுர

விருத்தம்

கண்டதுபொறுக்காராகிப் பெருஞ்சினங்கொண்டுசீறிக்
கழுகுபேருண்டங்கோழி ப்ரேதவேதளேமேறிப்
பண்டிவர்கதிரவன்பாற் பெற்றிடும்வரத்தாலந்தப்
படைகளைவிழிதுறக்கா வண்ணமாதவன்போனேக்கிச்
சண்டமாரிகளையொப்பாய்ச்சரம்பொழிந்தடித்தார்கூவித்.
தயங்கியேசத்திசேனை மயங்கினரன்னைகண்டு
தண்டநாயகிக்குரைத் தன்னவள் திரஸ்கரணியான
சத்தியையருளியந்த தேவிபோய்ப்போர்க்கெழுந்தாள்.

கீர்த்தனம். இராகம்—சுருட்டி தாளம்—ஆதி

பல்லவி

இருட்குலங்குடிகொண்டுசோதிமய—
மறைக்குமானவிமானமேறியே
திரஸ்கரணிகாதேவிபோர்செய்தாள் இருள்

அனுபல்லவி

அருக்கன்கிரணங்கன்பாய்ந் துருக்கிவிழிமயங்கிச்
செருக்களத்தடிபட்டுச்சரிக்குஞ்சத்திகட்கெல்லாம்
இரக்கமாயபயங்கொடுத்துகை
யிருக்குமாயைகள்விரித்துசாமள
வுருக்கலந்ததிவீரநாதமும்
பெருக்கியம்பிகையருட்கலந்துடன் இருட்குலம்

சரணம்

பானுவைப்போலகண்கள் காட்டிவிழிமயக்கிப்
பலத்தசத்திசேனையையடித்து விழுத்தும்பொல்லாத்
தானவராகுமேழுதலைவர்கள் முன்னேபாய்ந்து
தனதுமாயபுருளாற் றடுத்துமகாமோகன
மானவில்வளைத்தந்தவாளியா
லினராமவர்கண்கெடுத்தெழு
சேனைவீரர்சிரந்துணித்தவை
மேனிமாலையெனத்தரித்துநின்- இருட்

விருத்தம்

சேனைவீரரேழுபேர்சிரந்துணித்துமாலையாய்த்
திருக்கழுத்திலிட்டுமாயாதேவிநிர்த்தமாடினள்
ஆனைதேர்களோடுமன்னோரேறிவந்தகுழுவே
தாளமாதியானவையுந்தகர்த்துவென்றிமேவினள்
ஞானநாதைசேனைநாதையோடுசத்தியாவரும்
நன்றுநன்றெனப்புகழ்ந்தார்வென்றிசங்கமூதினர்
வானநாடர்போற்றினர்மயங்கியேசிலர்கள்போய்
மன்னனோடுசாற்றினரிடிந்தனுசர்க்கோதுவான்.

கீர்த்தனம். அஸாவேரி தாளம்-சாய்ப்பு

பல்லவி

எட்டிச்செல்வீர் மாதர்களை விரட்டிவெல்வீர்

அனுபல்லவி

பிர்ஷ்டதேவர்கட்காய்மட்டிலசுரரைத்
துஷ்டமாதர்கொன்றாற்கஷ்டமலவோநீ- ரெட்டிச்

சரணம்

பூங்கொடிபோலாகுமுடல் தாங்குமொருபூவைதன்னால்
வீங்குமலைபோலசுரரேங்கிமாளலானலது
ஓங்குமென்பெருமைதூங்குமேயிதற்கு
நீங்கள்சென்றவளையீங்குகொண்டுவர
ஒன்றிடுவீர்சூதாயிருளிற்சென்றிடுவீர் சேனைகளோடும்
பின்றொடர்வீரெதிரிட்டோரைக்கொன்றிடுவீரிதுவே
வேளை எட்டி.

விருத்தம்

மாதர்கள்படைகள்சூழவந்ததோர்லளிதையென்பாள்
மாயையா ஒவெல்வதல்லால்மற்றவட்கென்னேவீரம்
ஆதலாற்கூட்மாய்ச்சென்றவளைமாத்திரம் பிடித்தென்
னருகினிற்கொடுவாதம் பீயிதற்குநீவல்லோன்கண்டாய்
மாதவள்சேனைபின்தெரியாதுமறைந்துபோகும்
மரத்தினைமுறித்துவிட்டால் வளருமோதழைகள்வெல்லற்
கீதுநான்மாற்கமென்னவிசைந்துபொல்லாவிஷங்கன்
இருபதக்ரோணிசேனையொடுமொளித்திரவிற்சென்றான்.

கண்ணிகள். இராகம்—மாஞ்சி தாளம்—சாய்ப்பு

பண்டன்றனைவணங்கி யவன் பத்திமிகுந்தம்பிபுத்தியுளான்
அண்டர்தமக்குவைரி வீர னவிஷங்கன்படைகளொடும்
மூற்கன்மதனகனும் நீள முள்ளவொருநாக்கனிருநாக்கனும்
மாற்கொள்ளுமும்பகனும் உலுமல்லனுங்கற்கசன்சற்கிவா
கன்

புற்சென்புண்டரகேது பெரும் பொல்லான் ண்டபகுவென்
பவனும்
தக்கனசம்புகாட்சனுமவன் தம்பிஜம்பனன்றீட்சணசிரங்கனும்
கூரன்திரிகண்டகனும் சந்தர குப்தனுஞ்சேனுபதிகள்சூழக்
கார்நிறச்சட்டையிட்டு முடல் காட்டாமற்பேசாமற்கடுநிசியில்
உளக்கமொதுக்கியவர் மெள்ளவொதிங்கிப்பதுங்கியே
யோசையற்று
மேர்க்குத்திசைபுகுந்து தேவிமேவுபெருந்தேர்க்குப்பின்
ஞெதுங்கீ
பார்க்குட்காலோசையின்றி நின்று பாவிவிஷங்காதிவீரர்
மெல்லத்
தேர்க்குப் பின்பாலணைந்தே உடல் தெரியாமற்றேரின்
மேற்கணை சொரிந்தார்
பாவியிவர்வருமுன் ஒரு பத்தக்ஷோகிணிப்படைவீரரை
ஏவிக்குடிலக்கண்ணன்ருனு மேமாற் றமாய்ப்போர்க்களத்
தெதிர்ந்தான்.

விருத்தம்

காரிருள்மறையநின்றுதேரின் மேலுறையுஞ்சத்தி
கணங்களையடித்தகற்றநினைந்துவில்வளைத்தன்னிசர்
கூர்முனைவாணமாரியேவினரதுபோய்ப்பாய்ந்தங்
குற்றமாதர்கள்மயங்கிச் சுற்றிலும்பரந்துநோக்கி
ஆரையுங்கண்டிடாதாலலைந்துளந்தளர்ந்தார்பின்னும்
அசுரர்கள்தேரின்ருலவிர்ந்தமும்பொடித்தார்கண்டு
சீர்பெறுநித்யைமுன்றுகாலரூபிணிகள்சிறிச்
சின்மையுராஜராஜியம்மைபாற்சென்றுரைப்பார்.

கீர்த்தனம். இராகம்—ஸவுராஷ்டரம் தாளம்—சாய்ப்பு

பல்லவி

தாயேசரண்சரணீயே தருணமீதுன்னருளிசெய்வாயே

அனுபல்லவி

நீயேகதியெனநினைந்தே நீள்மணித்தேர்த்தட்டுறைந்தே
ஆயுதங்கள்கொண்டசக்தி யாகும்மாதர்களையெத்தி

மாயமாயக்கொண்டுபோகவேவஞ்சகவகரர்மறைதலா
கவே
காயம்நோவறக்கணகள்சொரிகுரூர் கலங்கிமாதர்கள்மயங்
கித்திரிக்குரூர்-தாயே

சரணம்

மைமயக்கம்பளம்போர்த்து மானிலமாதும்மய்ங்கி
மெய்மறந்துதூங்குமான வேளையீதுதிசைமயங்கி
பொய்யருளம்போலுமாகிப் புகுமிருட்குள்ளிலாகிப்
பொய்மிகுந்தார்கூடமாய்ப்போர் பொருதுகுரூரவரை
யிப்போ
மெய்தெரிந்திடும்வண்ணமேகியே வீரம்விண்டவர்மாள
லாகியே
செய்துகாலனூர்போகவிடுத்திடத் திருவருள்வருதிதருவாய்
துயர்கெடத்-தாயே

விருத்தம்

மங்களத்தாயுங்கேட்டுக்கண்களாலனுஞைசெய்ய
வன்னிவாஸினியுஞ்சுவாலாமாலினியென்பாள்தானும்
துங்ககாமேசியுஞ்சென்றங்கஜோதிகளால்மாயம்
தொடரிருளகற்றிவிரப்படையொடுநிட்போர்தம்மைக்
கண்கொடுகண்டுபோர்செய்தங்கவர்சேனையோடுங்
காலனூர்போகச்செய்தார்மதனகனமுதலோரேயும்
பொங்கியகோபமாயவ்விஷங்கனும்வெடியமட்டும்
போரிட்டுமிஞ்சிஞரோடேர்நாடியோடிப்போஞன்.

கீர்த்தனம். இராகம்—கோபிவஸந்தம் தாளம்—ஆதி

பல்லவி

பூமலர்தேவர்பொழிந்தார் மகிழ்ந்துசிவ
காமினிதேருறைந்தாள்.

அனுபல்லவி

யாமினியுமொதுங்கிப்பூமிமாதும் விளங்கி
மாமலரரிதிண்டத்தாமரைப்பந்துவேண்ட- பூமலர்.

சரணம்

அடங்கிடாதசோதியையிடங்கன்மறைந்துகைக்குள்
ளடங்குமாறென்னுமெண்ணம்மடங்கியவனும்படை

யொடுங்கிவாராகி போரிற்கிடுங்கிக்குடிலாட்சனும்
நடுங்கியோடினனப்பால் நெடுங்கொடியுயர்ந்ததேர்த்
தடங்கொண்டதேவியர்புண்ணுடனம்மை பார்த்தாறி
ஞரிப்பால்
குடங்கள்போற்குசந்துள்ளியாடவுத் தடங்கடலொலிமேளம்
போடவும் நடம்புரிந்து சங்கீதம்பாடவுந்தொடர்ந்து
சத்திள்பூமலர்

விருத்தம்

மறைந்தருளிற் கூடயுத்தஞ்செய்து பொல்லா
வஞ்சகர் மாதேவியிடம் வந்தாரென்ப
தறிந்துடனே சாமளைவாராகி சென்றே
யடிதொழுதுவேண்டியனையருளைப்பெற்றுப்
பறந்து மினியவர் வாராவண்ணஞ்சுவாலா
மாலினியாற்படர்வன்னிக்கோட்டையொன்று
சிறந்து சதயோசனைவித்தாரஞ்செய்து
திடமானார் அசுரர் கலங்கிடலானாரே.

கீர்த்தனம். இராகம்-பூபாளம் தாளம்—ரூபகம்

பல்லவி

சோதிவன்னிக்கோட்டைநன்ருய்ச் செய்து
சோதியைப் பணிந்து நின்றார்

அனுபல்லவி

ஆதிபராசக்தியருளாற்றெளிந்து
ஆயிரம் நாழிகை வீதியில் வளைந்து சோதி

சரணங்கள்

சாமளைவாராகிசொல்லால நீசர்
தாண்டிவாராவண்ணம் நல்ல
தூமமெழும்பிடச் சுவாலாமுகியாலே
நூய்மணியிழைத்த சொர்ணமதில்போலே சோதி
முன்னூறுநாழிகையெழுந்து சுவாலை
முகங்கொண்டுகன்றழைந்து

மன்னியவாசலோர் யோசனை யடக்கி
மாகேந்திரமென்னும் மலைக்கு வடக்கிற் சோதி
மத்தியில் ஸ்ரீசக்ரமிருத்தி த்தெக்கும்
வடக்குமிவர் தேர் பொருத்தி
சத்திசேனையெல்லாஞ் சுற்றிலும் யோசித்துச்
சாமளைவாராகிதேவியர்யோசித்து சோதி

விருத்தம்

அப்புறமசுரநாதனபஜயமோடு வந்தோர்
செம்பியமொழிகள் கேட்டுச் சீறியேமக்கள் தம்மை
விற்படையோடு சென்றுவெகுமாயைலளிதை தன்னை
கைப்பிடித்தேகுவீரிக்கணமெனச்சொல்லிவிட்டான்.

கண்ணிகள். இராகம்—ஹிந்துஸ்தானிகாப்பி
தாளம்—அடசாய்ப்பு

பண்டன்மக்கள் முப்பது பேர் பாகுபலமுள்ளார்
பண்டனைப்போல் வீரமுற்றூர்பார்க்குற்பெரும்பொல்லார்
பண்டிந்தரனையடித்துப் பற்றிபிமுத்திட்டோர்
பண்டிதர் யுத்தத்திலிவர் பாவபயம் விட்டோர்
சண்டன் சதுற்பாகு சகோராக்ஷன் போரில் மலையான்
அண்டர்வைரியாமிவர் களனுஜன் நாலுதலையான்
கண்டகன் வச்சிரகோஷன் காலனூர்த்த கேசன்
வண்டனையமாயன் வச்ரவச்ரனெனும் நீசன்
யாகசத்துருவும் பின்னோரான தம்பிமாரும்
வேகமாய்த் தேரேறிவர வீதியிற்கண்டோரும்
மாகதபுரவிர்த்தரும் வாழ்த்தித்துதிபண்ண
நாய்களுளையிட்டிவர்க்கு நாசகாலமென்ன
ஓரிருவதக்ஷோகிணியுயர்ந்த சேனைகூடப்
பார்கிடுங்கப்பூரிபேரிப்பல மேளங்கள் போட
வீரவெண்டயங்குலுங்கவெண்மழுவேலிட்டி
சூரபிண்டிபாலங் சூலந்தோமரங்களாட்டி
கண்பொறிசிதறச்சீறிக்காளரவு போலே
உம்பர்கண்டுங்கவீரமோதியொருக்காலே

அம்பரம் பொடியெழுப்பியாழிபோலுஞ்சென்றார்
கும்பலிட்டுக்கூவிவன்னிக்கோட்டைக்கிப்பால் நின்றார்.

விருத்தம்

பொன்னனையவன்னிதிகழ்கோட்டைக்கப்பாற்
புரண்டுவரும் வைரிகளைக்கண்டத்துவாரி
தன்னைவெகுசத்தியொடு காவல்கொள்ளுந்
தம்பினியின் படையெழுந்து போர்தொடுத்தார்
அன்னது கண்டன்னையிளங்குமரிபாலே
அமர்செய்யவாசையுற்றம்பிகையைப்போற்றி
நின்னருள்செய்யனவேண்டிவிடைபெற்றந்த
நிமலையிளங்கொடிசென்று சண்டைசெய்தாள்

கீர்த்தனம் இராகம்-ஸாரங்கள் தாளம்-ஆதி

பல்லவி

தேவியருள்சுதையுந் தேவர்வைரிசுதருஞ்
செய்தார்கள் பெருஞ்சண்டை

அனுபல்லவி

தாவிசாமளைவாராகியிருபாகமுஞ்
சார்ந்துகண்டு மகிழத்தேர்ந்து கண்டுலளிதா

சரணங்கள்

அண்டநாயகி பாததண்டத்தில் வந்து தோன்றி
அன்னங்கணூறுயூட்டியுன்னதமாய் விளங்குங்
கண்டிரதத்திலேறிக்கொண்டன்னையுதவிய
கவசம் வில்வாளியோடும் நவவயதுக்குமரி
சண்டைபுரியமகிழ்ந்துலாஷசத்திசேனையோடும்பரகாசச்
சண்டைமாரிபோல் வாளிவீசத்தானவேசருங்கண்டு
கூச-தேவி

பாதகர் முப்பதுபேர் சோதரருமொன்றித்துப்
பாராவாரம்போற் சேனை வீரர்களோடுஞ்சேர்ந்து
நாதம் முழக்கிவந்து மோதிவாளிகள்போட
நாணொலிகாட்டிவாலை தானுந்தடுத்தெதிர்த்துப்
பூதரத்தினில்மாரியொக்கப் பூவைவாளிகள் விட்டிறைக்க
சூதுகற்றவரேங்கிநிற்கச்சூழ்ந்துசத்திகளுந்துதிக்க.
தேவி

சூலம் முசுண்டி பிண்டிபாலம் முசலம்பாசந்
தோமமீட்டிருந்தம்பாமரர் விடுக்கவும்
கோலமணற்பொடிகள்போலுஞ்சிதறவைத்துக்
கோமளதேவியர்த்த சோமவாளிகள்வீசிக்
காலனூர்க்கவர்போகவிட்டாள்
கதறிமுப்பதுபேரும் பட்டார்
சாலநாரணனம்பு தொட்டாள்
தயித்யசேனைகள் யாருங்கெட்டார் தேவி

தண்டகவிருத்தம்

துலங்குகைவளைகிலுங்கவாளிகள்
சொரிந்து தானவர்சிரந்துணித்
திலங்குவாலயைவணங்கவானவ
ரெதிர்ந்துபூமலர்பொழிந்திடக்
கலங்கமற்றிருகரங்கள் கூப்பினர்
கணக்கில் சத்திகளனைக்குமுன்
நலங்கள் பேசியும் விளங்கிமேவினர்
நலிந்து பண்டனி துணர்ந்தனன்.

விருத்தம்

மாதிளங்குமரி கொல்லமாய்ந்தனர் மக்களென்று
தூதர்கள் சொல்லைக்கேட்டேதுக்கமுற்றசுரமன்னன்
பூதலம் வீழ்ந்து நெஞ்சம்புடைபுடைத்தேங்கியேங்கி
வாய்திறந்தழுது நொந்து வாடியே புலம்பலுற்றான்.

கீர்த்தனம். இராகமாலை—வராளி தாளம்-சாய்ப்பு

பல்லவி

ஐயயோசுதர்காண் நீங்கள்மடிந்த தாகந்தவிதிகாண்

அநுபல்லவி

மையார்விழிமாதர்கள் வலிபெறுங்காலமாச்சே
மலைபோலுநீங்களவராலிழந்தது மேச்சே ஐயயோ

சரணங்கள்

சீதமலர்கள்சூடிச்சிங்காரமாகிநின்று
சிரிப்புங்களிப்புமாகிச் சிறந்தமன்மகரென்று

காதல் மிகுந்த மாதர் வீதிவலமாயநில
காம்போதிக்குதிரை மேல் வருமுங்கடிருக்கோல
மெய்போதினிப்பார்ப்பேன். உங்கள் முக
மெய்போதினிச்சேர்ப்பேன். ஐயயோ

முகாரி

சாகரம்போலதிகம்பீரமோடுஞ்சிறந்த
சண்டபாகுபலங்களோடு நாளும்வளர்ந்து
தோகையர்கள் புணருந்தோளும்மார்பும் பாழாச்சோ
சுரர்முகாரிகளர்கிப்பெறும் வீரமும் வீண்போச்சோ
ஃதென்னவீதியோ தெய்வமிப்படி எண்ணினசதியோ
ஐயயோ

ஆகரி

மலைபோலுஞ்சிறுமாதர் பலங்கொள்வதென்ன கோலம்
மாபலவீரர் குலங் குலைவதுமென்னகாலம்
அலைகடலைக்கலங்கியமரரையுமடக்கி
யாளுமாகரிவீபரீரமவர்க்கொடுக்கி
மாண்டீரோசென்று எனையுமிங்கேமறந்தீரோவின்று
ஐயயோ

கண்டாரம்

முன்செய்தவினையோ வென்குலமுளையைக்கெடுக்க
மூண்டமாதர்பகைத்துவந்ததென்னேயொடுக்க
என்செல்வமென்ன வாழ்க்கை என்வீரமென்ன சத்தி
இனிக்கண்டாரமர் செய்தே
னெவராண்டேனென்ன வெற்றி ஐயயோ

விருத்தம்

இந்தவிதமசுரேசன்புலம்பியுள்ள
மிடிந்துவிழுந்தழுதுபெருமூர்ச்சைகொண்டான்
சுந்தரமாதருமமுதாரந்தவேலை
துணைவரிருவோருமவன்றன்னைத்தூக்கிச்
சிந்தையினைத் தேற்றியிது வீரர்க்குற்ற
திறமல்லவெனச்சொல்லிவிசுக்ரன் பின்பு
சொந்தமுளபடையொடுமாயையில் மறைந்து
தொடரிருள்வந்தணைந்தபொழுதுணர்ந்து சென்றான்.

கண்ணிகள். இராகம் ஸவுராஷ்டரம் தாளம்—ஆதி

பொங்குமமுற்கோட்டைக்குப்புறம்பணைந்தான் உள்ளே
போகவழிகாணுமற் சுற்றிவந்தான்
சிங்கமெனச்சினந்து சீறல்கொண்டான்—பின்போயத்
தென்பாகத்தொருவாசலிருக்கக்கண்டான்
அகம்புகுவதற்குள்ளே நினைந்தடுத்தான்—அங்கே
யமருந்தம்பினியைப்பார்த்துளங்கடுத்தான்
அகமுறைசத்திகள்யாவையுமயக்கிச் செல்ல
லாமென்றெண்ணியொருதுன்மதிதொலக்கி
கருங்கற்சிலையில்விக்னயந்திரம்வரைத்தான் எட்டுக்
கடுஞ்சூலமெங்கோணிலும் பொருத்திவைத்தான்
அருமையான மந்திர ஜபங்கள் தொட்டான்-அதில்
அலஸாதியஷ்டதெய்வமேத்திநட்டான்
பூசைசெய்தாபிசாரமெனப்பிறந்து-வந்த
பொல்லாயெந்திரத்தைக்கோட்டைக்குள்ளெறிந்தான்
வீசிப்படர்ந்து சத்திப்படை நடுவே சென்று
விமுந்திடமாதர் மதியழிந்திடவே

விருத்தம்

சத்திகளெல்லாமப்பாற்றங்கள் தன்செயல்வேருகிக்
கத்திகள் முதலாயுற்றகைப்படைகளையெறிந்தார்
புத்திகள்மாறிப்பேசிப்போர்செய்யுந்துறைகணிங்கிப்
பித்தர்கள் போலுஞ்சிந்தைபெற்றவர் புலம்பலுற்ருர்

கீர்த்தனம். இராகம்—வஸந்தபைரவி தாளம்—ஆதி

பல்லவி

ஆர் ஜபித்தேன்-இனி-யார்- மரித்தேன்

அனுபல்லவி

பாரிற்றேவிக்குழைத்தாற்-பலநமக்கதாலென்ன ஆர்

சரணம்

பேதைலளிதைக்குநாம்பிர்த்தியர் போற்றிரிவதேன்
பெருத்தவசுரரைக்கொன்றிடும் பாவம் புரிவதேன்
பாதகஞ்செய்துபொல்லாப்பழி தேடியுலேவதேன்
பாடும்பாவங்கூடி வாடிப்படைக்களத்தலேவதேன் ஆர்
தேகங்கஞேகச்சண்டைசெய்தவேலேகள் போதும்]
தண்டநாதை மந்திரிணிசேவை செய்ததும் போதும்
சாகவுழைப்பதாமோ தாய்தருவதும் போதும்
தானவரைக்கொன்றதாற்பின்வருவதும் போதும் ஆர்

விருத்தம்

ஆணையிலடங்காதாகிக்கோணியே சத்திசேனே
யங்காங்குவீழ்ந்து தூங்கிமங்கினர் மதிமாருடிச்
சேனுலாந்தேரிலேறிப்பாணிவிற்பூட்டி வாளி
தெறித்துடன் விசுக்றன்சேனேத்திறத்தோடு முட்புகுந்தான்
வீணேயுஞ்சுகமுந்தாங்குபாணி சாமளேவாராகி
விரைந்திவைகண்டுணர்ந்து நயந்தனேக்குரைத்தபோதிற்
சோணமாம்கரும்பெனும் விற்பணியும் மகிழ்ந்து நாதன்
றூய்முகம்பார்க்க வேழமாமுகன் வந்துதித்தான்.

கீர்த்தனம். இராகம்—சங்கராபரணம் தாளம்—ஆதி

பல்லவி

வேழமுகன்வந்துதித்தான்-தேவியருள
விக்னயந்திரம் பொடிபடுத்தான்

அனுபல்லவி

கீழுலவுஞ்சுண்டதண்டமோடில கும்வீரதந்தங்
கீறுபிறைமாமுடி மேலேறிவிளங்கவும்மத வேழமு

சரணங்கள்

மஸ்தகத்திற்பாய்மதமும் பாசோத்பலமும்
மணிக்கணிசேர்கரும்பு வில்லும்
புத்தமுதமணிக்குடமும் நெல்லுந்தாமரைப்
பூவும் மாதளத்தின் பழமும்

முத்தலை சூலங்கதையுஞ்சக்கிரமுங்கொண்டுயந்திரம்
முன்பு சென்று பாய்ந்து குத்திக் கொம்புகளாலேயுடைத்து
கன்னரந்தரத்தினின்றுங்கண்டத்தினின்றுங்
கரிமுகத்தினின்றுங்கோடி

யுன்னதகணபதிகளுர்பவிக்கயுறுமியதில் நின்றேழுபேர்
அன்னிலையிலே யுதித்தார் மன்னுபாசாங்குசமோடும்
ஆமோதன் பிரமோதன்முதலாதிவிநாயகர் சூழ வேழ

ஆனைமுகப்படைகளோடும் அசுரப்படை
யனைத்தையுமிமுத்தடித்தார்
தானவர்கள்மாண்டுருண்டார்-விசுக்றனகஜ

தானவனையேவிநின்றான்
சேனையேழக்ஷோகிணியோடேனமாயவனுமாய்ந்தான்
தேரிலேறிவிசுக்றனுமுரிலோடிப்போய் மறைந்தான். வேழ

விருத்தம்

ஜயவிக்னயந்திரம் பொடித்தபோதே சத்தி
சேனைகள் மயக்கநீங்கித்
தெளிவுறவிளங்கியமர்செய்துகொண்டாடவுந்
தேற்றியக்ணேசமூர்த்தி

கயமுகவிநாயகற்கதிபஞய் மருவின
ரன்னையும் மனமகிழ்ந்து
கருதுமெத்தேவர்க்கும்முன்ஞயபூசை நீ
பெறுகென்றுவரமளித்தாள்

ஜயபேரிமுதலான மேளமொடுமித்தலையி
வ்வர்திறம்பெற்றிருந்தார்
சென்ற தன்றிரவும்மிப்படியாயிரண்டுநாட்
சண்டைகள் முடிந்தபின்னும்

பயமுற்றவசுரேசர் யோசித்துளந்துணிந்த
மர்செய்யநண்ணிமுன்ரும்
பகல்கண்டுநேராய்விச்க்றனும் விஷங்களும்
பகைகொண்டு போர்க்கடுத்தார்

கீர்த்தனம். இராகம்—வேகடை. தாளம்—ஆதி

பல்லவி

விசுக்றனும்விஷங்கனும்போருக்கு விறுடன்நேர்ந்தார்

அனுபல்லவி

நசுக்கிமாதர்களுடல்களை நாய்நரி
பசிக்கூணுக்குவேணெனப்படையோடுஞ்சீறி—
விசுக்ற

சரணங்கள்

பலத்தநூறக்ஷோகிணிப்படையோடுமன்று
சலித்துவானவரைப்பயந்தள்ளிடச்சென்று
நிலத்தைக்கீறியோடும்ரதத்திலேறிக்கொண்டு
சொலித்தகனர்கோட்டை தொடர்ந்திருக்கக்கண்டு
விசுக்ற

பெருத்தகடல்கரை பிரண்டுவரும்போற்றுவி
கரத்தில்வில்வளைத்துச்சினந்துகணைகடுவி
தருக்குடையமாதர்தமைகொன்றவர்களாவி
செருக்களத்திற்குடித்திடுவோமென்றேதிமேவி
சத்திரங்கள்பலசண்டமாரிபோல்வீசிக்
சத்திப்படைகள்கைகால்தளர்ந்துமெலிந்துகூசிக்
கத்தியோடும்படிக்குக்காலாக்கினிபோலகோஷித்
தத்திரம்பொழிந்தலறிச்சீறிவிரங்கள்பேசி விசுக்ற

தண்டகவிருத்தம்

பண்டசோதரரெதிர்த்தார் கண்டுவானோர் சலித்தார்
படைகளுந்தொடரமெய்த்தார் கடல்போலும்
பண்டஸோதரியின்மக்கள் சண்டையிற்றலைவர் மிக்கோர்
பரிகரியானையேறிப் பலவீரர்
சண்டமாருதனையொத்தார் கண்டபேர்கிடுகிடுத்தார்
தறையொடுமலைகள்யாவும் விரைத்தாடக்
கண்டுசாமளை வராகிமண்டலத்தன்னை சொல்லாற்
காய்ந்துவந்தசுரசேனைக்கெதிர்சார்ந்தார்

விருத்தம்

மாமுறைமுனிவர்தேவர்மங்களவாசிக்கூறச்
சீர்மணித்தேர்களேறிச்சிங்கவாரணம்போல்வீர
சாமளாவிசுக்றனோடுஞ்சண்டையிலெதிர்த்தார்கோர
வீமரூபிணிவராகிவிஷங்கன்முன்போர்விளைத்தாள்

கீர்த்தனம். இராகம்-தோடி தாளம்-ஆதி

பல்லவி

சாமளா விசுக்றனோடுஞ் சண்டை
வீமமாய்ச்செய்தாளே

அனுபல்லவி

சோமனோர்பாதியிலங்கும்முடி கூடிச்
சுந்தரரூபமோடும்மந்திரிணிதேவியான சாமளா

சரணங்கள்

பஞ்சவர்ணமேனிசத்திகள்—கண்டார்
அஞ்சுங்கோரரூபசத்திகள்-பாடி
ரஞ்சிதஞ்செய்வெகுசத்திகளாடிக்
கொஞ்சுஞ்சுந்தரமான சத்திகள்- பின்னும்
பாயுஞ்சத்திகள்கோடி-வீசு மாயுதசத்திகள்கோடி-பெரும்
வாயுளசத்திகள்கோடி-யுத்தத் தோய்விலாசத்திகள்-
கோடிசூழப்
படைக்களத்திற்புகுந்து-முடுக்கிச்சேனைகலந்து
பலாபலங்கள்புரிந்து-கலகவீரம்மிகுந்து சாமளா

கடுத்தசுரர்சீறிமாட்டுவார்—கணை
தொடுத்துமாயுதங்கள்சாட்டுவார்—அதைத்
தடுத்துச்சத்திகளும்முட்டுவார்—சண்டை
பிடித்திருபடையுங்காட்டுவார்-வீரங்
கதறிவீழ்வாரும்-தலைகள்-சிதறிவீழ்வாரு-முடலம்
பதறிவீழ்வாரும்—கைகா-லுதறிவிழ்வாரு-மாகவே
கணைகள்தேவிபொழியப்-பிணம்பிணமாய்க்குவியக்
கடலுங்கரைமறியப்-படகொலிவிண்கிழியச் சாமளா

திசைக்குத்திசைவாளிகள்முடுக்கிறான்-சீறி
விசுக்றனுஞ்சத்திகளைநசுக்கிறான்-றேவி
யசக்திக்கைவளைகளைக்கிலுக்கினாள்-எமன்
பசிக்கவன்சேனைகளையொடுக்கினாள்-மிகச்
சினந்துதாபாஸ்தரம்விட்டான்-சத்திசேனை
நலிந்துகைவிரம்விட்டார்-தொண்டைவரண்டு
மெலிந்துடற்சுரத்திலுற்றார்-கண்கள்மயங்கித்
தளர்ந்துநீர்த்தாகம்பெற்றார்-மந்திரிணிகண்டு
தேவிவாராகிக்கோதமேவுந்தேருறைசீதந்
திகழ்மதுசிந்துவைப்பார்த்தவள்சொல்லிசுரைபெய்ய
சாமனே

விருத்தம்

தொண்டைகள்வரண்டுவாடிவிஷச்சுரங்கொண்டுமெத்தத்
துன்பமோடேங்கிவிழ்ந்தசத்திசேனைகளைக் கண்டு
தண்டநாயகியாள்தேரில்மேவிடுஞ்சிந்துராஜன்
றன்னைநோக்கவும்வணங்கிமுன்னுருக்கொண் டுநின்றான்
கண்டகவசுரனாலேகருகியசத்திசேனைக்
களமதுமட்டுநீயிக்கணம்மதுவகைகளெல்லாம்
கொண்டலின்மாரிபோலுங்கொடுத்திடரொழிப்பையென்னக்
கூறவுங்கேட்டுமத்யம்மாரிபோற்பொழியலுற்றான்

கீர்த்தனம். இராகம்—சுருட்டி தாளம்-ஆதி

பல்லவி

ஸிந்துராஜன்சுரையளித்தா-னமுதமது—
ஸிந்துராஜன்சுரையளித்தான்

அனுபல்லவி

மந்திரிணிசொல்லுக்குகந்து-வாராகிவருதிபெற்று
மத்தமதவிலோசனமோடுந்திருவுருவுற்று சிந்து

சரணங்கள்

கருப்புக்கட்டிகரும்புவெல்லமிந்திரிமத்யமும்
காதம்பினியாமென்னுங்கடம்பிலுப்பைமத்யமும்
விருப்புற்றதெங்குதாலமீந்தப்பனைமத்யமும்
வீறுள்ளவல்க்கியெனுங்கறுவாமத்யமுஞ்சேர்த்து சிந்து

வானுலகுற்றகற்பவிருக்ஷத்தூறுமத்யமும்
மற்றும்பலவகையில் வாற்றிவருமத்யமும்
நானுதேசத்திலுள்ள நானுவிதமத்யமும்
நன்ருயோர்சாமமட்டும்விழுந்தாரைமுறியாமல்
சிந்து

தித்திப்புமெரிப்புஞ்சற்றேதிவர்ப்புங்கசப்புளதுஞ்
சிகப்பும்வெளுப்பும்மெத்தத் தெளிவுங்கலங்கியதும்
மத்யவினங்கள்பலவாய்மரங்கனிகளினின்றும்
வகவகையாயெடுக்குமெவையுந்தாரைதாரையாய்
சிந்து

அஸ்திஸந்தாயினியுத்தச்ரமகாரணியாகவு
மாகமுற்றவாதபித்தகபங்கெடுப்பதாகவுஞ்
சத்தியுஞ்சயமுந்தஸ்துஸந்தாபந்தீர்ப்பதாகவுஞ்
சாரமுற்றமத்யமிவைவானமழைபோற்பொழிந்து
சிந்து

புஷ்கலவலாகமேகம்மழைசொரிவதுபோலும்
பொங்குமழற்கோட்டைக்குளேயெங்கும்மதுமாரி
களாய்

துக்கமறவும்யானையின்துதிக்கையெனப்பொழிந்து
துன்பமகன்றேவரும்பினம்பிகையைக்கொண்டாட
சிந்து

விருத்தம்

வாராகிதேவிசொல்லமதுவெனுஞ்சிந்துராஜன்
மலாபலவகையிலுற்றமணங்கமழ்மத்யமெல்லாம்
பூராயவான்புயற்போற்பொழிந்தனன்சாமமட்டும்
பொல்லாதவசுரசேனைபுக்கிடம் போகாவண்ணம்
தாராளமாய்க்குடித்தச்சத்திகள்தளர்வுதீர்ந்து
தயிர்யமுமதிகமானவிரியமும் பெற்ருரப்பாற்
சீரானசிந்துராஜன்தேவியால் வரங்கள்பெற்றுத்
தேர்மிசையுறைந்திருந்தான் போர்பினுமவர்புரிந்தார்

கீர்த்தனம். இராகம்-நாதநாமக்ரியை தாளம்—சாய்ப்பு

பல்லவி

போர்புரிந்தாரே தேவிகள்பெரும் போர்புரிந்தாரே

அனுபல்லவி

கார்கடலேழும்பெருங்கரைபிரண்டடெதிர்த்தாப்போற்
கண்டெமனுநடுங்கவண்டங்கிடுகிடெனக்— போர்

சரணங்கள்

விசுக்ரன்சினந்து சீறிவெகுகணைமந்திரிணிமேல்
விடுத்தி வுமதெலாந்தடுத்துத்தேவியவன்மேல்
உசத்தியானபாணங்களொருகோடிதறிக்கவும்
உடனேபொடித்தவனுஞ்சுடுகணைவிடுக்கவும்
உகந்ததைமாற்றி சாமளைபின்னும் புகழ்வாளிதூற்றி
அவன்றேரினில் இசைத்தகுதிரைகளுந்துசமுங்கீழ்வீழத்
தட்டி யிடக்கையில்வில்லுமறித்திடவும் ம்புகள்கொட்டி
பிசைத்தன்பதக்ஷோமிணிப்படைகளையும் வதித்து
ப்ரம்மாஸ்திரந்தொடுத்தந்தவிசுக்ரன்றலையறுத்து
வீழ்த்தினள்மண்ணில் வானவர்கண்டு போற்றினார்
விண்ணில்

பானுவுமப்போ ரசித்திக்கதையுரைக்கச்சுறுக்கிற்சென்று
ப்போல்மேற்கு நீலக்கடல்புகுந்திடயிருட்குலம்
படர்ந்திட

விஜயமங்களங்கூறியிசைந்துவானவர்போற்ற
வீரநாதங்கள்போட நாரதருங்கொண்டாடப் போர்புரி

அலமுஸலஞ்சுழற்றியட்டகாஸம்புரிந்து
அலறும்பன்றிமுகத்தாரளவிலாச்சத்திபோடும்
இலகுந்தண்டனுயகியிருள்மலைபோலுநின்று
இருட்புலக்கையாலடித்தொருநூறக்ஷோகிணியை
எமபுரம்விட்டாள் கண்டுபயந்து நமன்திடுக்கிட்டான்
விஷங்கன்சீறி பலங்கள்யாவும்புரிந்து கலங்கும்படி
போர்

செய்து பாதிராத்திரிமட்டும் மோதிப்பாதகன் நின்று
துலங்குங்கதைகளோடுந்தொந்தயுத்தங்கள்செய்து
தோராமலிருபேருந்தளர்ந்துபின்னுமெழுந்து
தொடர்ந்துபோர்தொட்டார் வீரவாதங்கள்மொழிந்து
வீறிட்டார்

அந்தவேளையில் மலைகணடுங்கநதிகடல்கள்கலங்கப்பூமி
மரங்கள்விறைக்கக்கண்டோர்நடுங்கியுடல்பறக்க
அலமாங்காலதண்டத்தாற்றலையீர்த்துவிஷங்கனை
அதிவீரவராகிமுசலமதாலுயிர்மாய்த்தாள் போர்

தாவியேயசுவாரூடையங்குசத்தாலிழுத்து
தயித்யவீரனுலூாகசித்தன்றலையரிந்தாள்

பாவிபருஷன்றலைஸம்பத்கரியுங்கொய்தாள்
பருத்தவிஷேணனை நகுலிதேரியுங்கொன்றாள்
படையொடுமெதிர்த்தகுந்திஷேணனை உடன்மாயைவதித்
தாள்
மலதன்றன்னை தேவியுன்மத்தையானபைரவிதொலைத்
திட்டாள்

சினந்துசகோரனையும்லகுச்யாமையொழித்திட்டாள்
மேவிக்கச்மரனைப்போய்ஸ்வப்னேசியகற்றிவிட்டாள்
வீரதயித்தியனைமங்களைகெடுத்திட்டாள்
விரைந்துதுற்கரனை பசுவாதினி சிரந்துணித்தவனை
யுயிர்கு
கோவித்துக்கொல்லடனைச்சண்டகாளியுந்தேய்த்தாள்
குதிரையில்வந்தவரைக்குதிரைச்சத்திகள்மாய்த்தார்
ஆவல்கொண்டானைவிரரானைச்சத்தியால்மாண்டார்
அன்பதக்ரோணிப்படையிந்தத்தேவிமார்வென்றார்—போர்

விருத்தம்

அசுரேசரிரண்டுபேருமழுந்திடத்தேவிமாரை
யமரர்கள்புகழ்ந்தார்மாதர்யாவரும்வாழ்த்திநின்றார்
நிசியன்றுமுழுதும்நீங்கிநிலந்தெளிந்திட்டபொது
நிமலைசாமளைவராகிநிண்முடித்தேர்களோடும்

அசுவவாகினிமற்றுள்ளவருமைமாதர்களுஞ்சூழ
வன்னைப்பாற்சென்றுணர்த்தியருள்பெற்றிருந்தாரிப்பால்
விசுவசத்துருக்களானவிசுக்ரனும்விஷங்கனும்போர்
மிசைமடிந்ததனைக்கேட்டுவெம்பினான்றனவேசன்

கண்ணிகள். இராகம்-ஹிந்துஸ்தானிகாப்பி தாளம்—ஆதி

ஸோதரரிறந்ததைநினைந்துபண்டாசுரன்
சோகமோடுள்ளங்குன்னினான் மக்களையும்
சாகக்கொடுத்ததுன்னினான்

ஏதுவில்லாமல்மாதர்போர்க்குவந்தசுரர்கள்
இறந்ததைநினைத்தேங்கினான் றெய்வவிதியின்
திறம்பெரிதென்றேதாங்கினான்

தேவர்களையும்வென்றுதிசைகளுஞ்சயித்தர்ளும்
திறமெல்லாம் விண்போச்சுதே மாதர்களாற்
குறைபேசும்வகையாச்சுதே

மூவுலகாண்டாலென்ன தேவருய்வாழ்ந்தாலென்ன
முக்கண்ணன்றனைமறந்தாற் செல்வமெதும்
போக்கென்பதுவுந்தெரிந்தான்
வெம்பினாலென்னபலன்விதிவசமிதுவன்றோ
விடுவென்றால்விட்டிடுமோ வினைபுரிந்த
கெடுமதிகெட்டிடுமோ
நம்பின பேர்களெல்லாம்நமனூரடைந்தபின்பு
நமக்கிங்கேயென்னபாரில் மாதர்களைக்
கொமைக்குறேனினிப்போரில்
கன்னல்மொழியாகியமின்னற்கொடிவளிதை
கண்பார்வைக்கின்றுசெல்வேன் பராக்ரமத்தை
முன்பாயச்செய்தின்றுவெல்வேன்
என்னநினைத்துத்துன்பமதனைவிடுத்துத்தேறி
இடிபோலலறிச்சீறுவான் சினந்துநோக்கிக்
குடிலாக்ஷனோடுகூறுவான்

கீர்த்தனம் இராகம்-முகாரி தாளம்-ஆதி

பல்லவி

கொண்டுவாகொண்டுவாடாப் போருக்குத்தேரைக்
கொண்டுவாகொண்டுவாடா

அனுபல்லவி

பெண்டுகள் நீங்கலாயிங்குள்ளவரையடுத்துப்
பின்படையாகக்கூட்டிமுன்படைநீயெடுத்துக் கொண்டுவா

சரணங்கள்

கச்சைகவசஞ்சந்தரஹாஷம்வாணதூணீரம்
ஸச்சமாக்கிச்சகலபடைகளொடுமின்னேரம்— கொண்டுவா
ஆனைதுரகங்காலாளணிமிகுதிரளோடும்
தானவவீரர்களைச்சதுங்கவிருதோடும்— கொண்டுவா
அளவிற்சேனைகளெல்லாமாயுதங்களுந்தூக்கி
வளைகடலெனவிப்போவரச்சொல்லென்னுரைதாக்கி—
கொண்டு
சகலஸேனாதிபதிபருந்தங்கள்பரிகள்மீது
பகைவர்போருக்கென்னோடுபடைக்கலஞ்சேர்த்திப்போது—
கொண்டுவா

விருத்தம்

நாலங்கமான சேனையாலங்கொள்கடல்களொப்பாய்
நமனினுங்குடிலநேத்ரன்றிடமுறக்கூட்டிநின்றான்
காலனைப்போற்சினந்துநீலமாகுணம்போற்சிறிக்
கட்கமும்வில்லுஞ்சந்தரஹாஸமுந்தரித்துப்பண்டன்
கோலநன்மணித்தேரேறிமூலநாசனஞ்செய்தின்று
கோதையர் கூட்டமெல்லாங்கொடுங்கணைக்கிரை
கொடுப்பேன்
மாலயன்றேவர் தாமுஞ்சீலமாமுனிவரெல்லாம்
மனமுளைந்தோடும்வண்ணமாக்குவேனென்றெழுந்தான்

கீர்த்தனம். இராகம்—பந்துவராளி தாளம்—ரூபகசாய்ப்பு

பல்லவி

தேரிலேறிச்சென்றான் பண்டாசுரன் போரிற்சீறிநின்றான்

அனுபல்லவி

காரிருள்மேகங்கள்போலவுங்கற்சித்துக்
கண்ணுதலைமனங்கொண்டலரற்சித்துத் தேரிலேறி

சரணங்கள்

காலாள்கள்கால்களாலும் மோதிவருங் கரிபரிதேர்களாலும்
வேலாயமாயாடிப் புவிமிக நொந்துபொடிமுடி
மேலேயெழும்பியாகாசம்மறைந்திட
மேளதாளவொலிகாதைத்தறித்திடக்
கோலவசுரரலற்சைபெருத்திடக்
கோணங்கிழிந்தண்டகோளம்விறைத்திடத் தேரிலேறி

பார்கள்கிடுகிடென்க மலைகளும் பதறிநடுநடுங்க
நீர்கள்குலுகுலுங்கக் கரைதாவி நின்றுகடல்கலங்க
தேருருள்நாதமோடானைகள்பாரிடம்
சேஷனுந்தாங்காதசேனைகள்பாரிடம்
போர்முகங்கொண்டசுரேசன்சிறந்திடப்
புத்திகலங்கியமரர்மறைந்திடத் தேரிலேறி

ஆங்காரவில்லைத் தொட்டான் இடிகள்போ
லட்டகாஸங்களிட்டான்
தாங்காதகோபமுற்ருன் குடிலாசுரன்
றன்னெடும்போயங்குற்ருன்
போங்கோலங்கண்டெட்டுநாதரும்பயந்தார்
பூமிபொறுக்காமல்வேதன்முன்னயர்ந்தான்
எங்கியேசத்திப்படைகள்பின்வாங்கினுர்
இரவிமதியுமொளித்துவானீங்கினுர்-- தேரிலேறி

விருத்தம்

அண்டர்தம்வைரியாகுமசுரமன்னவன்சினந்தங்
கழல்தழந்திலகுகோட்டையருகுசென்றணைந்துசீறி
அண்டமுங்கிடுங்குமாறேரட்டகாஸம்புரிந்தான்
அதுபொழுதஞ்சிச்சுவாலையணைந்துட்னெழுந்த தப்பால்
அண்டநாயகியும்நோக்கியதிசயித்தகிலசத்தி
யாகியபடைகள்சூழவமார்கள்பூவிறைக்க
மண்டலம்புகழுஞ்சாகைவாராகிமுதலாந்தேவி
மாரொடும்போருக்குச்சிந்தைமகிழ்ந் தெழுந்தருளினுளே.

கீர்த்தனம். இராகம்—தோடி தாளம்—ரூபகம்

பல்லவி

காமாக்ஷியெழுந்தருளினுன் காமேசாமோகினி.
காமாக்ஷியெழுந்தருளினுன்.

அனுபல்லவி

மாமுனிவர்சித்தர்கள்கூட மகிழ்ந்துகந்தர்வர்சங்கீதம்பாட
மாமலர்மாரிவானவர்மூட வானமாதராடமாலயன்கொண்டாட
காமா.

சரணங்கள்

நான்குயோசனைவீதிவளைந்து
நன்ருயொருபதுயோசனைகிளந்து
நான்குவேதவும்வண்டிலாயமர்ந்து
நலமாயானந்தத்துசமாப்நிமிர்ந்து

தாங்குந்தர்மாதிக்குதிரைகளோடுந்
தாளமேளசத்ரசாமரைகளோடும்
ஓங்கும்ஸ்ரீசக்ரராஜத்தேருக்குள்
ளுறைந்துநித்யைகள் பொருந்தப்போருக்கு-காமாக்ஷீ

மேகயானைகளேறுஞ்சத்திகள்
வியாளிஸிம்மங்களேறுஞ்சத்திகள்
வேகவசுவங்களேறுஞ்சத்திகள்
மிர்கங்கள்பக்ஷிகளேறிஞ்சத்திகள்
போகசத்திகள்யோகசத்திகள்
பூதசத்திகள்நாதசத்திகள்
மோகசத்திகள்முழுதுலகமும்
முயலுஞ்சந்திகளனைவருஞ்சூழக்— காமாக்ஷீ

ஆவரணமொன்பதிலுஞ்சத்திகள்
அப்பாலுமிப்பாலுமனந்தசத்திகள்
தேவர்களம்சமானசத்திகள்
திதிவாரநக்ஷத்ராதிசத்திகள்
காவல்சத்திகளிதுவல்லாமலுங்
கணநாதர்பைரவாதிகள்சூழச்
சேவைபுரியுந்தேவர்க்கிரங்கித்
தீரசூரபண்டாசுரன்போருக்குக்— காமாக்ஷீ

சந்தவிருத்தம்

அளந்தசத்தியோடுலகனைத்துமீன்றவன்னைபோர்க்
காயெழுந்தபோதுநன்னிமித்தமங்குக்காண்கவும்
நினைந்துநன்றுநன்றெனத்தெளிந்துசத்திசேனைகள்
நெடுங்கடற்றிரண்டெழுந்தென்னவருதல்கண்டுடன்
மனந்திடுக்கமோடுமந்தவன்னிவாசல்வீதியாய்
மருவினளச்சுவாலதேவிவிரைவினோடு சென்றுபோர்ச்
சினந்தெரிந்தசூரரோடுமாதர்யுத்தம்பண்ணினார்
இறைவியந்தவன்னிவாசல்மேவியங்கு மன்னினள்

கீர்த்தனம். இராகம்—அடாணா. தாளம்—சாய்ப்பு

பல்லவி

சத்திசேனையுமசுரசேனையுஞ் சண்டைசெய்தாரே.

அனுபல்லவி

குத்தியவர்களையிவர்களித்திடக்
கத்தியிவர்களையவர்களடித்திடக்
கூடியிருவகைப்படையுங்கலந்துபோ
நாடியசுரர்கள்வாடிமரித்திடச்— சத்திசேனை

சரணங்கள்

ஆனைவீரரோடானைச்சத்திக ளசுவவீரரோடசுவசத்திகள்
சேனைவீரரைவீரசத்திகள் சென்றெதிர்த்திடவும்
ஆனைமுகத்தாரோடானைமுகத்தாரு
மசுவமுகத்தாரோடசுவமுகத்தாரும்
ஏனமுகத்தோரோடேனமுகத்தாரும் எதிர்த்துப்போரிடவும்
ஊனமுற்றவருமுயிர்களற்றவரு
முருண்டுவிழுவாரும்பிரண்டுநெளிவாரும்
ஈனவசுரர்களானபிணங்களா
யெங்குநிறையபயங்கரமாகிய— சத்தி

தானவர்கள்பெருயானைகுதிரைகள்சண்டையினிலடி
கொண்டுடல்கிழியு
டானபொழுதெழுங்குருதிநீர்பெருவாறுபோலாக
மானிலம்மறைத்தும்பிணங்களையிழுத்து
மகரம்முதலானவினங்களெனக்கொண்டு
பேனமேனவும்வெண்சாமரைகுடைகள் பெருகியொழுக்
கோட
கானம்பாடிப்பேய்கள்களித்துக்குதியிடக்
கரைகளில்நாய்நரித்திரள்கொதிபட
வானமிசைகாகங்கழுகுவட்டம்போட
மதித்தகாளிசூளிநடித்துக்கும்மிபாட— சத்தி

தண்டுகொடுஞ்சூலம்பிண்டிபாலங்குந்தம்
தறிக்குங்கப்கமிருட்புலக்கைநெடும்பாசங்

கண்டபரசுமுசுண்டிகொடுங்கத்தி கலப்பையெறியீட்டி
கண்டமறுத்திடுஞ்சந்திரவலயரு சுண்டியிழுத்திடுமங்கும்
கணைவில்
கதிர்முனைகொள்சக்ரமிதுகள்முதலானகைப்படைகளோடும்
அண்டியடிப்பாரும் மண்டியிடிப்பாரும்
அதட்டிவெட்டிவாரும்விரட்டியோட்டுவாரும்
மண்டைசதைந்தோருங்கண்டமறுந்தோரும்
மறிந்தலறிவிழுந்திறந்திடுவாருமாய்- சத்தி

விருத்தம்

இப்படியீரிரண்டாந்தினத்திலங்குதயந்தொட்டவ்
விருபடைவீரரும்போரிட்டனரிரண்டுசாமம்
அப்புறமசுரநாதனண்டமுடுங்கிடுங்குமாரு
ரட்டகாஸம்புரிந்தாகாச முந்திசையுங்காண
தற்புதக்கணைகடூவியன்னைதேரிணைமறைத்தான்
அதுகளைத்தடுத்துவீரரணிகளைக்கிழித்துஞான
சிற்பரன்மடிபிற்றங்குசெங்கிளியெனவிளங்குந்
தேவியுஞ்சரங்கள்விட்டாளூழிநாள்மழையி
தென்றே

இருச்சொல்' இராகமாலை—வஸந்தா. தாளம்-ஆதி

பல்லவி

பரதேவிபோர்தொடுத்தாள் பண்டாசுரன்
பெருமதங்களைக்கொடுத்தாள்.

அனுபல்லவி

கரகங்கணங்கிலுங்கக்கரும்புவிற்றிருட்டுவன்னச்
சரம்விடுத்தசுரேசன் பரவசந்தனைமன்ன- பரதேவி

சரணம் பைரவி

எடுக்கும்போதொன்றுபாணந் தொடுக்கும்போதொருபத்து
விடுக்கும்போதொருநூறு அடுக்கும்போதொரு ஆயிரமாய்
முடுக்கியசுரசேனையுடக்கும்போதுகோடியாய்த்
தடுக்கும்வழியிலாமற்கிடுக்கும்பைரவிபோலே- பரதேவி

பல்லவிதோடி

பண்டாசுரன்கோபமுற்முன் பரதேவிமேற்
சண்டைசெய்துதாபம்பெற்றுன்

அனுபல்லவி

மண்டலங்கிடுங்கச்சீறித் தண்டமானவில்வளைத்துச்
சண்டமாரிபோற்கணைகள் மண்டிவேகத்தோடிறைத்து - பண்

சரணங்கள் ஆரபி

கருமலைபோலசீறிப் பெருவீரவாதங்கூறி
இருள்மயமாகச் செய்யுமொருவந்தாஸ்திரம்விட்டுப்
பருங்கடல் போலெதிர்த்துவருஞ்சத்திசேனைகளை
உருவங்கள்மறைத்திட்டான்பெருமிதாங்காரபீம பண்டா

மோகனம்

கருணைத்திருவுருக்கொண்டருள்புரிந்திடுமன்னை
அருணவஸ்திரமவிட்டவ் விருளகற்றவும் பின்னே
விரவிற்பாஷண்டாத்திரம் சுரவைரிவிட வுங்கண்
டருங்காயத்ரிவாளியாற்றுரத்திமோகனரூபி- பரதேவி

கல்யாணி

பொல்லானந்தாஸ்தரம்விட்டே எல்லார் கண்களுங்காகூஷி
இல்லாமற்செய்தான் கண்டுநல்லகண்களுதவும்
வல்லசட்சுஷியஸ்திரம் செல்லவிடுத்துநித்ய
கல்யாணிமாற்றச்சீறிவல்லமைகூறியந்தப்- பண்டா

ஆனந்தபைரவி

மந்தன்பின்னும் சினந்து சத்தி நாசன மென்னும்
அஸ்திரந்தொடுத்திட்டவித்தையைக்கண்டதற்கு
நித்யானந்தபைரவிசுத்தியருளுஞ்சர்வ
சித்திப்றாணசுவரூபவஸ்திரம்விட்டுமாற்றி — பரதேவி

பரசு

மின்னுங்கனல்கள்சிந்தப்பின்னுமபயாஸ்திரம்விட்டு
மன்னுஞ்சத்திகணெஞ்சந்தன்னைத்தடுத்திடக்கண்
டன்னையபயரஸ்திரத்தாலன்னதைமாற்றிடபார்த்
துன்னிப்பரசுதம்போற்றுன்னும்பற்கள்கடித்துப் - பண்டா

பலகரி

அந்தகாஸ்திரம்விட்டானந்தகாந்தகாஸ்திரஞ்
சுந்தரிவிட்டுமாற்றச்சிந்தைமறதியஸ்திரம்
அந்தவேளை விடுத்தான் சிந்தைமற்வாஸ்திரத்தால்
எந்தாயகற்றியெதிர்வந்தார் பலகரியய்ப் — பரதேவி

கமாசி

தீமைசெய்குட்டமாதிபீமரோகாஸ்திரத்தைப்
க்ஷேமஞ்செய்தனள்சிவகாமியோ கமாசிலாள்
பாமரன்பின்னுஞ்சீறி தூமக்கணைகடுவிப் - பண்டா

காம்போதி

காதிற்குண்டலமாடச்சோதிவளைகளாடக்
மோதுமுத்தணிகொங்கைமீதுமாலைகளாடக்
கோதிமுடிந்தபின்னல்வா தாசியெனவாடச்
சீதமணங்கமழ்கான்போதிளங்கொடி போலே பரதேவி

சந்தவிருத்தம்

அதுபோதினிலசுராதிபனசுராஸ்திரம்விட்டான்
அதிவீரர்கள்மதுகைடபர்மகிடன்புகை நயனன்
சதிசெய்திடுசண்டாசுரன் முண்டாசுரன் றாமன்
தளராரக்தபூஜாசுரன் சும்பாசுரன் முதலோர்
குதிகொண்டமரிடவந்தனரதில்நின்றிவரெல்லாம்
கொடியாரிளமடவார்படை பொடி செய்திடலானார்
இதுவென்கொலோவெனவன்னை பாலவள்சேனைகளோடி
இணைதாண்மலர்சரணென்றிடவிறையாளிது செய்தாண்

கண்ணிகள். இராகம்—ரீதிகவுளை தாளம்—ரூபகம்

ஸ்ரீ சக்ரராஜசினந்துடனே செய்தனஹுங்காரமப்போ
ஸ்ரீ துற்காதேவிவந்துதித்தாள் தேவர் களிந்தபடைகளோடும்
செங்கதிர் போலதிகழ்ந்து சிங்கமீ தேறியணைந்து
தீரர்மதுகைடபாதி வீரர் தம்மைச் சென்றுவென்று
சண்டிகையேழுபேர்கள்சூரத் தாயின்பக்கம் மேவிநின்றுள்
கண்டனன்பண்டாசுரன்பின் கடற்படவானலம்போற்சீறி

காய்ந்துசினந்துடன்விட்டாளுயுசுநாசனவஸ்திரம்
கண்டுமாயுவர்த்தனஸ்திரம்கொண்டுதேவிமாற்றநீசன்
மூகாஸ்திரம்விட்டுவாயடைத்தான்முக்கணுடையவள்கண்டதனை
வாக்குவாதினியஸ்திரத்தால் மாற்றினள்பாவிவேதசோர
ராகுந்தயித்யரைவிட்டான்யோகினிவலக்கையங்குஷ்ட
மானநகம்நின்றுமாயன்மீனரூபமாயுதித்தே
அந்தச்சங்காசுரனையொழிக்கஅர்ணவாஸ்திரம்பின்விடுத்தான்
சுந்தரத்தற்சினிதெறித்தாள் தோன்றுங்கூர்மமதால்முறித்தாள்
தொட்டனனிரண்யாஸ்திரத்தை விட்டனனிரண்யாட்சர்களை
தோன்றிவந்து சத்திசேனைதீண்டிநின்றுதைத்தல்கண்டு
மத்திமவிரலைத்தெறித்துவிட்டாள்வாராகமாமூர்த்திதோன்றி
அத்தனைபேரையுமகற்றிநின்று ரசுரேசன்புருவம்நெரித்
தாயிரங்கசுபுகள்விட்டான் அன்னையுமனுமிதொட்டாள்
அந்தவேளைநாரஸிம்மம் வந்தவரைத்தின்றுநின்றான்
மாவலியஸ்திரம்விடுத்தான்பினும் மாதேவிசுண்டுவிரலசைக்க
மூவடிமண்கேட்டழித்தவர்மனமூர்த்தியாலதுமவலப்பட்டான்
மூற்கனுமேகயவாளிபோர்க்களம்விட்டிடச்சாடி
முன்னெதிர்ந்துகார்த்திவீரமன்னர்கள்போராடல்கண்டு
அன்னையிடதுகையங்குஷ்டமதினின்றுபார்க்கவராமர்
மன்னிற்றோன்றியவர் தம்மைமாற்றவும்பண்டனுஞ்சீறி
வாய்கொடுவுங்காரமிட்டான்போர்கொளநிசிசரர்வீட்டான்
வானவர்கள்வைரீராவணாதிகளும்வந்தெதிர்த்தார்

விருத்தம்

ஆயிரம்வெள்ளஞ்சேனைநிசிசரரோடிலங்கைக்
கதிபதிதானுங்கும்பகர்ணனுமிந்தரசித்தும்
மாயமாய்வந்துசத்திசேனையோடெதிர்த்தார்கண்டு
மகதேவீவாமஹஸ்ததர்ஜினிநகத்தினின்றுஞ்
சாயைபோற்றொடருந்தம்பிதன்னொடுமிராமன்றோன்றித்
தசகண்டன்முதலோர்சம்மைத்துணிக்கவுங்கண்டு சீறி

தாயின்மேலசுரநாதன்றுவி தாஸ்திரத்தையேவத்
தாவியேகுரங்குவீரர்கூவியேபோரிட்டாரே.

கண்ணிகள். இராகம்—கமாசி தாளம்—ரூபகசாப்பு

நீண்டவாலுங்குழிந்தகண்ணும் நீளமாகிச்சிவந்துகோபம்
பூண்டமுகமும்புலிபோல்நகமும்பொருந்தும்வடிவோடும்
தாண்டிமறிந்துசாடிக்கடிக்குந்தாட்டைவீரர்களாங்குரங்குகள்
தீண்டிமாருதிபோலுஞ்சூரர்கள் திரண்டுபோரிடுஞ்செய்கை
கண்டுடன்

அண்டநாயகிவாமமத்திமவங்குலிநகம்தெறித்தலம்பிடித்
துண்டநன்மதுவாற்சிவந்தகணேடும்பலபத்திரன்
அண்டியக்கவீ வீரரைக்கொலவப்பாலசுராஜாஸ்திரம்
பண்டன்விட்டிடப்பாய்ந்ததினின்றும்பலத்தராஜர்கள்குதித்து
வந்தனர்

துட்டனுஞ்சிசுபாலன்முதலோர் சூரனுங்காசிராஜன்பவுண்டற
நிட்டூரரானருக்குமன்சிம்மகன்நீண்டகைவாணன் [கன்
சம்பரன்ப்ரலம்பன்கம்ஸன்சாணூரமுல்லர்கள்பின்னுங்
கம்பமற்றதோர்தேனுகன் கேசியுங்காளிங்கன் மற்றும்பொல்
லாதவராகிய

சகடைபூதனையிவர்களும்வந்துசண்டைதொடுக்கக் கண்டனு
நகந்தொட்டம்பிகைவிடவும்வந்தநரவாசுதேவர்களாற் [மிகா
பொல்லாரவர்கள்பொடிபட்டிடப் பின்பொல்லாதானவநாதன்
சினமுடன்
பொல்லாக்கலியாமஸ்திரந்தூவினன் பொல்லாவினையாளர்
பூமியிற்றோன்றினர்

விருத்தம்

வேததர்மங்களானநீதிஸன்மார்க்கமாகும்
விளக்குகளனைத்துமுடவிருட்படர்ந்திடச்செய்விக்கும்
பாதகரானநீசர்பரம்பொருளுணர்விலாத
பாவிகள் சிவத்துரோகச்சாவிகள்நல்லோருக்குத்

தீதுசெய்வோர்கள் தற்கவாதிகள் சிந்தைநஞ்சாய்த்
திரிவர்கள் தேகமேமெய்ப்பொருளென நம்புவோர்கள்
போதமில்லாங்காரப்பேய்ச்சாதிகள் பொறுமையில்லா
பொங்கரவெனச்சினந்தோரங்குவந்தெதிரிட்டாரே

கண்ணிகள். இராகம்—கவுளிபந்து தாளம்—ரூபகம்

கலியுகப்பாமரர்களிவர் கலகஞ்செய்திடக்கண்காமேசி
இலகுமிடதுகரச்சிறுவிரல் இசைந்தநகந்தொட்டுடனே
சினந்துமயமுகமுடனே

கட்கமேந்திக்கனன்றுசீறிக் கட்கிமூர்த்தியுதித்தவர்களைப்
புக்கிடச்செய்தாரெமபுரமப்பாற்புகழ்ந்து வானவர் பணிந்தார்
தெரிந்துதானவன்சினந்தான்

சங்கரிஸர்வஸாக்ஷிணி தன்கைத்தாமரைவிரனகங்களில்வந்த
மங்களமூர்த்தியொருபதுமேரும் மைவிழியணையருள்கொண்
கைதொழுதரிபுரிசென்றார் [டார்

மாமோகனாஸ்தரம்விடுத்தசுரேசன்மாமோக மயமாக்கினான்சே
ணையை
மாதேவிமகாசாம்பவாத்திரத்தால் மாற்றினள் கண்டகமுடைந்
தான்மேற்றிசை கதிரவனடைந்தான்

விருத்தம்

திறமிகுந்தொருவராலுஞ்சயிக்கொணுவரமும்வீரமும்
சிறந்தவதிரங்கள்மற்றும்பொடிந்திடக்கண்டுவாடி
அறுபதும்பத்துமானமாயிரவாண்டுபோராண்
டசுரநாயகனுய்வாழ்ந்தவாழ்வொடுசெல்வமெல்லாம்
இறுதிகொள்காலம்வந்ததோ வெனவெண்ணியீசன்
இட்டதோர்விதியைமாற்றயேவராலாகுமென்ன
உறுதிகொண்டெழுந்துபின்னுமுறுமிடும்பண்டன்றன்னை
ஒழித்திடும்வண்ணமண்டமளிக்குநாயகிநினைத்தாள்

கீர்த்தனம். இராகம்—சங்கராபரணம் தாளம்—ஆதி

பல்லவி

ஆரணம்பேசும்ஞான பூரணியமர்செய்து
வீரவிஜயம்மேவினாள்.

அனுபல்லவி

நாராயணாஸ்திரம்விட்டுவீரதானவன்சேனை
நமனூர்க்குச்செல்லவோட்டியமரர்கட்கருணூட்டி - ஆரணம்

சரணங்கள்

சீறிப்போரினிலெதிர்த்தேறியெமன்போல்வீரஞ்
செலுத்திச்சத்திசேனையையடிக்குந்துட்டர்களான
காரிருள்மேனிகுடிலாட்சன்முதற்சேனாதி
காரிகளைக்கண்டன்னையோர்பாசுபதம்விட்டுக்
கருகியசருகுகளெரிகனலிற்பத்து
வருவழிந்ததுபோலத்தலைவர்களைவதித்து - ஆரணம்
ஜோதிரூபிணிபின்புசோதிகாமேசாஸ்திரந்
தொடுத்துவிடவுஞ்சென்றுகடுத்தபண்டனுடலை
மோதியெரித்துயிரையூதிச்சூனியநகர்
முன்பணைந்ததற்குப்பேர்சொல்வதைநிசமாக்கி
முழுதுலகனையிடம்மருவவுந்தேவர்கண்டு
தொழுதுபூமலர்மாரிபொழியவுமருள்கொண்டு - ஆரண

விருத்தம்

அண்டநாயகிவிடுத்தகாமேசவத்திரஞ்சென்
றசுரநாதனையெரித்தவ்வழியவன்நகர்புகுந்து
பெண்டுபிள்ளைகளோடங்குபேறுற்ற செல்வம்யாவும்
பெருமதில்மேடைகூடம்வீடுகளணைத்துஞ்சுட்டுப்
பண்டைபோற்பாழ்த்தபூமிமாத்திரமாக்கியந்தப்
பதிமுற்றுஞ்சாம்பராகப்பறந்தவுமநதவேளை
கண்டமரேசனாதிதேவர்கள்விண்ணிறைந்து
கனமலர்சொரிந்தார்மாதர்கானநிர்த்தனம்புரிந்தார்.

கீர்த்தனம். இராகமாணை—சகநா: தாளம்—ஆதி

பல்லவி

ஜயமங்களங்கூறித்தேவர்கள்கொண்டாடினார்
நயசோபனங்கள்பாடி நாரியர்களாடினார்

அநுபல்லவி

பயமொழிந்ததென்றுதவமுனிவர்களும்வாழ்த்தினார்
பரமகல்யாணியையாவர்களும்போற்றினார்- ஜய

சரணங்கள்

பண்ணிசைந்தவீணைகளுங்கின்னரிகளாதியும்
பாடல்களுமாடல்களுந்துந்துமிபேரிமுதல்
எண்ணரியமேளதாளமெண்டிசையும்மோதவே
எம்பரையையன்பரெலாமின்பஸ்துதியோதவே— ஜய

வெற்றிகொண்டுசத்திசேனைவென்றிசங்கமூதினார்
வேதநான்கும்வந்துருவாய்நின்றுபுகழோதினார்
முற்றுமாயுலகனைத்தும்பெற்றதாயைவாழ்த்தியே
மூவுலகுமெண்டிசையும்மூவர்களுமேத்தியே— ஜய

பண்டாசுரனவனைவென்றயிக்கதையைக்கேட்பவர்
பத்திசித்திமுத்தியும்பயனெதுமடைகுவர்
மண்டலத்தில்மகிமையுற்றேவந்த நோய்கள்தீருவர்
மைந்தர்களும்பெற்றுவாழ்வர்மாகருணைசேர்வரென்று
ஜய

சந்தவிருத்தம்

அந்தரர்பூமலர்மாரிபொழிந்துய
ரம்பரமெங்கும்விமானநிறைந்துட
னங்கெதிர்வந்துபுகழ்ந்துநெருங்கிட-வதுவேளை,
சுந்தரமானவரம்பையராதிகள்
சூழ்ந்துவணங்கிமகிழ்ந்துநடங்கொளச்
சோகமகன்றவராகியதேவர்கள் தோமுதேத்தக்
கந்தருவாதிகளெச்சரர்கின்னரர்
கன்மஷமற்றமுனீசுவரர்சித்தர்கள்

கானமிய நிடுதும்புருநாரதர் - சுகமேறும்
நந்தகிநாரணன்வேதனுருத்திரன்
நற்றிசைநாதர்கள்மற்றெவருந்தொழ
நாடியணிந்தடி போற்றவுங்கூப்பின - நளினங்கள்

கீர்த்தனம். இராகம்—கல்யாணி தாளம்—சாய்ப்பு

பல்லவி

அம்பிகேயருள்செய் ஸ்ரீ ஜகதம்பிகேயருள்செய்

அனுபல்லவி

எம்பெருமான்றிரியம்பகனுடனே
யின்பாகவும்முன்பாயமர்— அம்பி

சரணங்கள்

அத்தன்சீர்மயிலே அடியர்மனத்தமர் குயிலே
சுத்தபூரணியேஉலகமளித்த காரணியே
நித்தனோடாடுநிர்த்தவிலாஸினி
பத்திநேசர் மனத்திருஞ்சினி
சித்திமுத்தியளித்திடுமாரணி
ஸத்யரூபிணி சத்ருசம்ஹாரணி
சித்திரம்பெறுதத்ரை தாமரை
யொத்தவங்கைதரித்துமுத்தம
ரத்தினங்களிசைத்தகுண்டல
முத்தசைத்ததிலத்தையாள் ஸ்ரீஜக— தம்பிகே
பாக்யமாநிதியே வறுமைநோய் போக்குமவுஷதியே
தாய்க்குமேலருளே புரிந்துகண் பார்க்கும்பொருளே
தீர்க்கமைவிழியார்க்குட்சிலாக்கியமே
பார்க்குள்வன்பவந் தீர்க்குமாவாக்யமே
ஏர்க்கவந்தருள்தாக்கும் பேரின்பமே
நோக்கிஞலொன்று நோக்கிற்போந்துன்பமே—
ஆக்கிபுலபெகதுங்காக்கும்கருணையே
யாக்கையொடுபணிவார்க்கருளமுத
வாக்குறுஞ்சுருதிசூக்குமமேயடி
யேர்க்குநீலகண்டனூர்க்குரியஸ்ரீஜக— தம்பிகே.

விருத்தம்

விண்ணொடுமண்ணுங்கீழும்விளங்குமெத்தேவர்மற்றும்
விமலைகாமேசிபாஸ்வந்தடி தொழுதங்குறைந்தார்
பண்ணிசைவீணுகானம் பாடல்செய்யும்
பரிவாரசத்திசூழப்பரதேவியுஞ்சிறந்தாள்
மண்ணிலஞ்ஞான நீங்கிமகதேவனன்புற்றருள்
வந்திடும்போதம்போலவந்தனன்சதிரோனப்பால்
எண்ணருஞ்சத்திசேனையிறையருள்விழியாற்றேறி
இன்பமுற்றிடவுந்தேவரம்பிகையைப்புகழ்ந்தார்.

கீர்த்தனம். இராகம்—தர்பார் தாளம்—சாய்ப்பு

பல்லவி

நமோநமோபரதேவி நமோநமோ

அனுபல்லவி

நமோஜகந்நாதே-ஸ்ரீபுரவாஸினி
நமோபண்டாசுரதானவநாசனி
நமோகாமேசுவரவாமவுலாஸினி
நமோசிந்தாமணியாலயவாஸினி- நமோ

சரணங்கள்

அருமைபெறுங்காமேசுவரிநமோநமோ
ஆனந்தநித்யைகள்போற்றும்பாதம் நமோ
பிரமன்முதலானதேவருஞ்சித்தரும்
பேத்மில்முனிவருமேத்தும்பாதம்பாதம் நமோ
பெருமைசேர்ப்ராம்மிமுதலானமாதர்கள்
பேணித்தொழும்பாதமேன்றும் நமோ நமோ
பரம்பேசுவரிஸ்ரீலளிதே நமோ நமோ
பேதந்தடுத்தெமையாள்வாய் நமோ நமோ- நமோ
மந்திரிணிதண்டநாதைமுதலான
மாபலதேவிகள் வாழ்த்தும்பாதம் நமோ

சுந்தராமாதர்கள்கான நடனஞ்செய்
துள்ளமகிழ்ந்திடப்போற்றும்பாதம் நமோ
அந்தமிற்சத்திகள் சூழ்ந்துகரங்கூப்பி
அன்புரிந்திடும்பாதம் நமோ நமோ
விந்தைபெறுஸ்ரீலளிதே நமோ நமோ
வேதாந்தரூபிணி நீயேகதி நமோ

விருத்தம்

வன்னிகுண்டத்திற்ருேன்றிவந்தெமக்கபயம் நல்கி
வரமளித்ததுபோற்பண்டாசுடிரனேவென்றருள்புரிந்தாய்
இன்னமோர்குறையெங்கட்குண்டதனேயுந்தீர்ப்பாய்தாயே
இமையமாவரையின்மாதுமிறைவனுஞ்சேரும்வண்ணம்
முன்னநாள்மாரன்றன்னேயேவிஞேமவன்போய்நீருய்
முடிந்தனன்ரதியுங்கைமையடந்தனள்கருணேநோக்கி
அன்னவன்றன்னேத்தந்தும்பரன்கிரிமாதைச்சேரும்
அருளேயுஞ்செய்வாயென்றுமயன்முதலவாஞேர் சொல்வார்

கீர்த்தனம். இராகம்—ஸ்ரீ தாளம்—ரூபகம்

பல்லவி

சங்கரியின்னம்நின்கருணேசெய்
தெங்கள்குறையைத்தீர்ப்பாய்

அனுபல்லவி

மங்களரூபசவுந்தரி யங்கஜனேத்தந்தருள்புரி
மங்கியாதியிவட்கீய்பதிநின்கழலிணேயலதிலேகதி-
சங்கரி

சரணம்

தாரகனென்ருேரா சுரவல்லான் வீரஞ்சிறந்தபாரிபொல்லான்
போரினுக்கீசன்குமரனல்லாலாருமெதிர்போரெங்குமில்லாந்
காரணநாதன்றவம்பிரிந்து மாரன்கணேயால்மயல்மிகுந்து
சீர்மலேமகளிணேப்புணர்ந்து ஒர்சுதனவர்கட்குப்பிறந்து
பேர்பெறவேண்டிநினேத்தோம்மாரனேவிட்டுடல்பொடித்தோம்

பார்மிசைபண்டளுறெந்தோம் ஓர்துயரின்றுறொற்றீர்ந்தோம்
கார்சிறந்தகண்டன்மைந்தனுனகந்தனைத்தருவாய் சங்கரீ

விருத்தம்

என்றயன்முதலாந்தேவரிப்படியுரைக்கக்கேட்டும்
அன்றடிவிழுந்துபோற்றியழும்ரதிதன்னைக்கண்டும்
பொன்றிகழ்மேனிகாமகண்ணிதன்புருஷனுகுங்
குன்றவில்லுடையான்றன்னைக்குளிர்நகைசெய்து
பார்த்தாள்

கீர்த்தனம். இராகம்—தோடி, தாளம்—ஆதி

பல்லவி

சூதபாணன்வந்தான் அதிசுந்தரரூப சூதபாணன்வந்தான்.

அனுபல்லவி

நாதனைத்தேவிநோக்கப்போதனுமெதிர்பார்க்க
நான்குகையுமோங்குகன்னல்வில்லுமாய்
நளினமானவொளிசிறந்த மேனியாய்ச்— சூதபா,

சரணம்

கண்டோர்மனமுருக்கீக் கரும்புவில்லில்
வண்டானஞாணிறுக்கிப்
புண்டரீகமசோகஞ்சூதமுற்பலம்மணம்
கொண்டமல்லிகைமலரென்னுமைவகைபாணங்
குளிர்ந்தமதியெனுந்தேரோடும்வான்
றுளைந்தமீனக்கொடியோடும்
இளந்தென்றலெனும்பரியோடுங் குயில்
மொழிந்தகுரல்மேளவிருதோடும்
கோதிற்சேனைநாதனய்வசந்தனும்
கொஞ்சிவந்திறஞ்சமோகமதனெனும்- சூதபா

விருத்தம்

வந்தமன்மனுந்தாயின்மலரடிபணிந்துமுன்னாள்
மாரனுயிருந்துமுக்கண்ணுதனுற்பொடிந்தேனின்றுன்

மைந்தனுயுன் கடாட்சப்பார்வையிற்றேன்றி நின்ற
 மாமதனனேன்மாளாவரமெதுந்தந்தாளென்றான்
அந்தவாறபயமீந்துமகிலமுநிறைந்தெவர்க்கு
 மதிரதிசெய்வாயென்றுமனங்கனுயீசனேயும்
சந்தமாமலரின்பாணமெய்திடின்சயமாமென்றும்
 காமேசியருளிப்பின்னுங்காமனேடிதுசொல்தாள்.

கீர்த்தனம். இராகம்—பியாக் தாளம்—ஆதி

அனங்கனுயினிவாழ்குவா யாவுலகுக்கு
மனங்கனுயினி வாழ்வாய்-

அநுபல்லவி

அனங்கனுயுலகத்திலதிரதிசெய்துமேவி
மனங்கெள்காமனுய்நின்றுமணமலர்மாரிதூவி- அனங்க

சரணங்கள்

யாவருனேப்பழிப்பர் யாவருனேயிழப்பா
பாவிகளாய்ப்பிழைப்பர் படியில்வீணுட்கழிப்பர் அனங்க
என்னேயெலர்நினேவ ரென்பூசையெவர்செய்வர்
அன்னவரின்படைவர் அவமிலராயிடுவர் அனங்க
தேவதேவனருள்வர் சிந்தையுன்மீதுறவர்
தேவிதன்னேப்புணர்வர் திருமகனேப்பெறுவர் அனங்க

விருத்தம்

என்றுதாய்வளைதைசொல்லி யினியநல்வரங்களீந்தாள்
நின்றுகண்டுடனனைந்த நிதிமூழ்கும்ரதியைச்சேர்ந்தே
அன்றுதானேபோய்க்காமன் றரனேயுங்கவுரியேயும்
ஒன்றுசேர்ந்திடப்பூவாளி யோட்டினன்றீட்டினனே.

விருத்தம்

காமன்வந்திட்டபாணங் காமேசியருளாலென்றே
 காவநாசனுணர்ந்து கருணையாய்த் தேவர்கட்குச்

சேமம்வந்திட நினைந்து சென்றிமவரையின்மாதை
மாமணஞ்செய்துகவுரா மாதொடும்மருவினனே.

கண்ணிகள். இராகம்--சங்கராபரணம் தாளம்—ரூபகம்

ஓஷதிப்ரஸ்தமென்னுமுமை தாதைநகரத்திலும்
மாசிற்கைலாஸத்திலும் மலயமிதிலும்
விந்தியாசலந்தன்னிலும் மேருமலைதனிலும்மேவி
சந்திரசூடன்வஸித்தான் றையலாளொடும்.

பின்னும்பலவிடங்களிலும் பெருமானும்மலைமகளும்
மன்னிக்கலவிபுரிந்தான் வளமிகுகாலம்
தேவர்விடுந்தூதாகித்தேயுவும் வாயுவுமணைந்து
தேவதேவனையுணர்த்தத் .தீக்கணினின்றும்

பரன்விடுத்தசோதிதனைப் பாவகனுஞ்சுமந்துநொந்து
திரையடித்துமுழங்கிவரும் கங்கைதன்னிலே
அவன்விடுத்தானலையடித்தே யாறுபங்காய்ச்சரவணையிற்
சிவன்விடுத்தஜோதியதுஞ் சென்றொதுங்கியே

ஆறுசிசுவாயுதித்தே யாறுகன்னிமார்வளர்த்தே
ஆறிவந்தம்பிகைமுலை யுண்டாறுமுகனுய்க்
கைலைமலைதனில்வளர்ந்து காமாரிபாற்கல்விகற்று
மயிலமர்ந்துவேலணிந்து வானோர்வேண்டவே

தாரகாதியசுரரொடுஞ் சண்டைசெய்தங்கவரைவென்று
மாரநாசனன்மகவன்மகிழ்ந்திருந்தனன்
அரியுஞ்சம்பாரியுமளித்த வழகுமிகும்வல்லியேயும்
உரியதெய்லானையயும் மணந் துகந்திருந்தனன்
கந்தன் மகிழ்ந்திருந்தனன்



விருத்தம்

இப்படிதேவர்க்கெல்லா மிடரொழித்தின்பம் நல்கி
அப்புறம்ஸ்ரீபுரஞ்சென் றன்னைதாழ்ந்திருந்தாளென்றே
செப்பினரயக்கிரீவர் தெளிந்தகஸ்தியரும்வேண்டி
அப்புரவிபரமுந்தா னறிந்தவாறறைகின்றரே.

கீர்த்தனம். இராகம்—வேகடை தாளம்—ஆதி

பல்லவி

தத்துவமானஸ்ரீபுரத்தின் விபரமறிந்
ததையுரைக்கக்கேளாய்

அனுபல்லவி

புத்திமுத்திமுதலாம் பொருள்களருளுஞ்சர்வ
சத்திசிவமுறையுந் தானமாகியபர- தத்துவமான

சரணங்கள்

காரணபுருஷர் மூவர் சொற்கொண்டுவிச்வ
கர்மாநிர்மிதமாகவும் மேருநிஷதம்
ஹேமகூடமிமையங் கந்தமாதனம்
நீலகிரிமேஷம்சிர்ங்கம் மாகேந்தரமென்னும்
பேர்பொருந்துங்கிரிகளொன்பதிலும் விரிந்த
பெருங்கடலேழுங்கொண்ட மறுகரை களிலுமாய்
ஓர்பதினாலுபுரமுண்டேழு கோட்டையொடும்
உய்யானங்களுமுயர் கோபுரங்களுஞ்சூழச்
சீர்பெறும்க்ஷேத்திர முண்டிவையொன்றுபோல்
ஸ்ரீசிவகாமேசர் காமேசி வாழ்வுகொண்
டாரடிபோற்று வரன்பொடுமன்னவர்க்
கல்லவைபோகமும் முத்தியுந்தருள்பர—தத்துவமான

கோலமைமேகம்போற்சூழ்ந்த இரும்புக்கிட்டக்
கோட்டைமுந்தியதிற்காவற் கொண்டிரெட்டுக்கோண்
காலசகரத்தில்மருவிப் பலவாய்நின்ற
கால சத்திகள் காலரும் சூழவும்மகா
காளியுடனேமகாகாளருமிரும்பெனுங்
கைத்தவிரண்டாங்கோட்டை செம்புமுன்றுமதாகும்
நாலுபித்தளை ஐந்துலோகமைந்துங்கொண்டது
நல்வெள்ளிதங்கமுடனேழும் வெளிக்கோட்டைகள்
ஸாலமற்றுறிலுந்தழைந்தசத்திகளோடும்
தங்கள் சக்றங்களிற்றங்கிறிதுக்களாறும்
கிலமணங்கமமும்சோலைகள்மதுவுண்டு
ஸ்ரீலலிதயைப்போற்றிக்காவல்கொண்டுறைந்திடும்பர-தத்து

நாகமசோகம்புன்னகம் தாலகிந்தாலம்
நாங்குகொங்குபுளிபுங்கு சடையிலுப்பை
மாகமுகுபுலாதெங்கு கதளிகன்னல்
மாதளமோடும்கூவிளஞ் செம்பகமோ

டனேகதருக்கள்புஷ்பவாடிகள்மணம்வீச
நெருங்குஞ்சோலைகளோடும் விளங்குந்தலவிசேஷம்
போகசித்தியுண்டின்பம் பொருந்திமாதர்களோடும்
பூமதுபானஞ்செய்து காமலீலைபுரிந்து

மோகவஸந்தனும்க்ரீஷ்மனும்வர்ஷனும்
முதிர்சரனேமனும்சிரியிவர்யாவரும்
யோகமிகும்புரவாசல்தழைக்கவும்
உள்ளிலுறைந்துவிளங்கிடுஞ்சோதிபர— தத்துவமான

விருத்தம்

இன்னவாறுயர்ந்தகோட்டையெழிதுபோலபின்னு
முன்னதமானகோட்டையுள்ளிலுமுண்டனேகம்
அன்னதின்விபரமெல்லாமறிந்துரைத்திடுவதற்கும்
அன்னவா கனனும்நாவாயிரமுளானாலுமாமோ

கண்ணிகள். இராகம்—கேதாரம் தாளம்—திருபுடை

பொன்மயக்கோட்டைக்கப்பாற் புஷ்பராகமயமாய்
நின்மீதமானகோட்டை நிறைந்தசித்தர்கள்வாஸம்
நன்மதுவுண்டவர் நாரீமார்களோடும்
சின்மயிதேவியைத்யானஞ்செய்திடுவார்

அப்பால்பத்மராகத்தா லழகாகியவோர்கோட்டை
தற்பரையைச்சிந்தித்துச் சாரணர்கள் நிவாஸம்
அப்புறங்கோமேத மானகோட்டையதில்
அமர்ந்தவர்யோகினி பைரவிமுதலோர்

வச்சிரஸாலம்பின்பு வடிவிற்சிறந்தோராகுங்
கச்சணிமுலைமேன கைமுதல்மாதரோடும்

அச்சமின்றிப்போகவமுதுண்டுகந்தர்வர்
பச்சம்வைத்தனையைப்பாடியாடியுய்வர்
அதன்பின்வைடூர்யஸால மனந்தன்சேஷன்முதலோர்
நிதமுநாககன்னிமார்நிறைந்து வஸிக்குமிடம்
இதுகடந்தபின்பு இந்திரநீலஸாலம்
அதிலுறைபவர்களறஞ்செய்யும்ராஜர்கள்.

விருத்தம்

அப்புறம்முத்துக்கோட்டையங்குநன்னதிகள்பாயும்
அத்திசையெண்கோணத்திலஷ்டபாலர் கணிதானம்
திப்பியமரகதத்தாற்சிறந்ததோர் கோட்டைபின்பு
தேவிவாராகிவாழும்க்ஷேத்திரமங்குபிற்மா
டற்புதப்பவளக்கோட்டையவ்விடத்தருந்தவத்தார்
ஆகியமுனிவர்சூழவயனுறும்பிரமலோகம்
சொற்புகழ்மாணிக்கத்தாற்றுலங்கிக்கோட்டையப்பாற்
சோதிவைகுண்டனங்குவாழ்பதிவிஷ்ணுலோகம்.

கீர்த்தனம். இராகம்—காம்போதி தாளம்—சாய்ப்பு

பல்லவி

குடமுனிகேள் இன்னஞ்சொல்வேன் குடகுனிகேள்.

அனுபல்லவி

கடல்களேழுங்குடித்திட்டோய்
காமேச்வரிபுரச்செய்தி- குடமுனி

சரணங்கள்

நன்மாணிக்கக்கோட்டையம்பால்
நாளுமணிக்கோட்டையுக்குள்
நின்மிதமாயோர்மண்டபம்
நீண்டகாலாயிரமோடும்
விண்மதிகதிரோன்போலும்
விளங்குமதிற்களங்கிலாத

சின்மயனீசுவரன்வாழும்
சிவ்லோகமாம்மகிமைபெறும்— சூடமுனி

மனதெனுமோர்கோட்டைபின்பு
மாதவனேயுண்டங்குதான்
நினைவொடுஞ்சென்றமுதமுண்டு
நெடுநாளுற்றகாயமோடும்

அனவதிசித்தர்கள்மேவு
மமுதவாகினியொழுகும்
இனியமதுவாபியுண்டங்
கேவராலுஞ்செல்லொணுதாம்— சூடமுனி

மந்திரிணிவாராகிதேவி
வருதியோடும்மகாதேவி
மந்தரமெனுந்தோணியேறி
வந்துபோந்தாரைவழியாய்

அந்தமதுவாபிசென்றங்
கமருந்தாராதேவிபாதம்
வந்தித்தம்மதுவுண்பார்க்கு
மரணரோகபயமில்லையாம்— சூடமுனி

விருத்தம்

புகழ்மனக்கோட்டையங்கு
பூமணங்சிறந்தமத்யம் பொங்குமானந்தவாபி
மகிழ்பெறுஞ்சத்திசூழ வாருணீதேவிவாஸம்
மலையமாமுனியேயப்பால் மகதகங்காரக்கோட்டைக்
க்கமுறும்விமிர்சவாபி யதிலுறைகஷோம்ணீதேவி
அப்புறம்சூரியஸாலமங்கு ஸ்ரீவாலைவாஸம்
திகழ்மதிக்கோட்டைபின்பு திமிரநாசஞ்செய்துற்ற
தேவிசந்திரிகையோடும் ஸ்ரீஸோமநாதவாஸம்

கீர்த்தனம். இராகம்—பைரவி தாளம்—ரூபகம்

பல்லவி

சிங்காரக்கோட்டைக்கப்பாற் சிந்தாமணிக்ரகத்துக்கிப்பாற்
சித்தஜன்வாழ்பதிவிந்த்ய மர்த்தருகேளாய்

அனுபல்லவி

கொங்கைமின்னார் மோகவலைக் குள்ளிறுக்கியுளங்கலக்கும்
கோதில்மலர்வாணவீரனதிமனோகரன்ரதிசெய்துமேவும்-சிங்

சரணங்கள்

அன்னைவளிதேசுவரிபா லன்புடையரல்லாகில்
அரியயனுயிருந்தாலு மல்வழியுட்போகவொட்டான்
உன்னுமவர்கருத்தையெல்லா முருக்கிமாதருடற்பிரட்டி
யுலகில்மண்மேலுருட்டிவிடு மலர்வாளியோகன் கலவி
செய்திடுஞ்-சிங்கார

போகரஸாம்புதிநடுவே பொருந்தும்வட்டப்பீடமதிற்
பதுமலர்நன்மணம் வீசும் பொன்கொடிமாதர்களாகும்
போகினிகளொங்கூடிப் போகமதுபானஞ்செய்து
பூரணகாமங்கலந்து நாரணியைப்போற்றிமாரன் குடிகொள்
ளுஞ்-சிங்கார

சிந்தையன்பில்லாதமூடர்செல்லார்காண்சுத்தமிலேற்
றேவர்கட்கும் போகருதாஞ்சிறுமனிதர்க்கெட்டாதாம்
இந்தவழிகடந்திடுவதெளிதாமோ குடும்பிகளுக்
கில்லுவலனுயிர்குடித்தோய் நல்லன்புவைராக்யமுள்ள
வர்கள்செல்லுஞ்-சிங்கார

விருத்தம்

இப்படியாகக்கோட்டையிருபத்துநாலுசுற்றும்
இருமதிற்கிடைகள்வீதியேழுயோசனைகளாகும்
அற்புதக்கோபுரங்களொருநாலுவீதந்தொண்ணூற்
ருறெடுசிறந்ததற்குள்ளனந்ததெய்வங்கள்வாஸம்

கற்பகம்முதலாய்மற்றுந்தருக்களுங்கணக்கிலாத
காவல்சத்திகளுஞ்சூழ்ந்தயானையுங்கடந்தபின்னே
ஒப்பிலாமணியிழைத்தசிந்தாமணிக்ரஹத்தின்
உண்மையுமம்மைமேவுந்தன்மையுமுரைக்கக்கேளாய்

கீர்த்தனம். இராகம்—ஹிந்துஸ்தானிகாப்பி. தாளம்—ஆதி

பல்லவி

சொல்லக்கேளாய் இல்வலாந்தகா சொல்லக்கேளாய்

அனுபல்லவி

நல்லபத்மாடவிநடுவில்விளங்குமுழுக்
கில்லாமணியிழைத்தங்கிலகுஞ்சோதிக்ஷேத்திரத்தை-
சொல்ல

சரணங்கள்

சிங்காரக்கோட்டைமுதற்சிந்தாமணியாற்செய்த
க்ஷேத்திரமாகுமதிலாறுயோசனைவீதி
எங்கும்மணிமயமாம்ஸாலமிருபத்தைந்துண்
டீரிரண்டுதிசையுங்கோபுரவாசல்நூறு- சொல்ல

அப்பாலாறுயோசனையமரும்பத்மாடவி
யனந்தமாய்ப்பூத்திலங்குந்தளங்கள்யோசனைவீதி
சிற்பரயைத்தொழுதுசித்திகலைகளந்தத்
தெருவீதிகளில்வாஸஞ்செய்வர்காணும்முனியே-
சொல்

கிழக்குவீதியிலறக்யக்கிண்ணத்திற்பலகலை
கிண்ணஞ்சூரியகலைவன்னியாதாரமாகும்
முழக்கியதனிற்பொங்கும்முழுமதிகலாமுதம்
மொண்டுசோதனைசெய்யுஞ்சுத்திகளுமங்குண்டு-சொல்

விருத்தம்

சிந்தைநன்மணிக்ரகத்தைச்சுற்றிநின்றுயர்வாயோங்குஞ்
செந்தாமரைத்தெருக்கடோறுமாலயங்களாகும்
மந்த்ரிணிதண்டநாதைமகதேவிதேர்கள்மூன்றும்
மணிவீதிதன்னிற்றங்கும்வன்னிகுண்டமுமுண்டப்பாற்

சுந்தரத்தளங்கள்சூழ்ந்துதொலங்கிடுங்கோணந்தோறுஞ்
சூக்குமமந்திரதெய்வந்தொலங்கும்ட்சரங்களியாவும்
சந்தநால்வேதம்வாணிகசதுமுஷ்டிகலைகளோடும்
சகலதேவதைகள்சூழத்தழைந்ததவ்வட்விதானே

கீர்த்தனம். இராகம்—யமுனகல்யாணி தாளம்—ஆதி

பல்லவி

ஸ்ரீபுரப்பட்டணமிதுநடுவே நல்ல
சிந்தாமணிக்ஷேத்திரஞ்சிறந்ததுவே

அனுபல்லவி

சீர்பெருங்கணபதிசிவசங்கராலயங்கள்
சிறந்தசித்திகள்வாஸமுறைந்தகிரஹங்கள்சூழ- ஸ்ரீபுர

சரணங்கள்

மந்திரிணிதண்டநாதைவாழுமாவயஞ்சிந்தா
மணிக்கிரஹத்துக்குத்தெக்கும்வடக்குமாகியணைந்து
சுந்தரசுஷும்னைபின்றுணையிடைபிங்கலைபோற்
றொலங்கும்பின்னும்மூவர்கள்கிரஹங்களுமுன்விளங்
கும்- ஸ்ரீபுர
சோதிமயமாகவோர்சுற்றும்மதிலுறைந்து
துவாரமொருநான்கொடுந்தூபிகளொடுங்காணும்
வேதம்நான்கும்மகிழ்ந்துகாவலன்லனடைதாண்டின்
வெய்யவன்கோடிபோலவிளங்குமேவிந்துசக்றம்
-ஸ்ரீபுர
வையுஞ்சிந்தாமணியாயிலகுமிவ்வாலயத்துள்
எழுந்தவேதிகைமீதிலிருந்தவிந்துசக்றத்தில்
நவயவ்வனரூபிகளாகியவணிமாதி
நானசித்திகள்மற்றுங்கலைகள்பலவுஞ்சூழ ஸ்ரீபுர.

விருத்தம்

அரவிந்தநவிற்றங்குவரவிந்துசக்றத்தின்பால்
அமர்ந்துயக்பீடந்தோறுநிறைந்தருள்தேடியந்தப்
புரநின்றுசேவைசெய்யும்பரிசாரமாதரர்கும்
புகழும்யோகினிகளிதயையாதிகள்கவற்கமாகி

சரவித்தைரூபசத்தி சரசாபசஸ்தரசத்தி
 சுயமந்திரயாகயோகஜயமுத்துஸித்தியாவும்
பரமுற்றதேவிதன்பாற்பரிவாரதெய்வமாகிப்
 பணிகொள்ளஐவராம்பஞ்சஹணமிசைபரையிருப்பாள்

கீர்த்தனம் இராகம்—நாகநந்தினி தாளம்—ஆதி

பல்லவி

சிதமதிசூடியசிவகாமேசரங்கத்திற்
சின்மயிசிறந்திருப்பாள்.

அனுபல்லவி

ஜோதிவிந்துசக்ரத்திற்றுங்கவிந்துபிடத்தில்
ஆதிஐவர்கள்மஞ்சமாகியதிலுறையும்— சிதமதி

சரணங்கள்

பூதமஞ்சும்சப்தா தியஞ்சும்லாக்காதியஞ்சும்
 பொருந்துசுரோத்ருதிமனம்புத்தியாங்காரமுதல்
ஆதிஸோபனமேறியானந்தத்தற்பமீதில்
 அருளுருவாயகண்டப்பொருளுருவாகிவாழும்— சிதமதி
சுந்தரவடிவோடும்சோடசவயசோடும்
 சோதிப்றகாசமோடும்தொலங்குமுக்கண்களோடும்
சுந்தரம்நீலமோடுங்கதிர்மணிமுடியோடும்
 கைகளுலோடும்வந்ததெய்வசிகாமணியாம்— சிதமதி
ஆனந்தம்மகிழ்ந்துருவாகியபாதமோடும்
 அமுதந்திரண்டுதோன்றும்மார்பிற்றனங்களோடும்
மீனங்கள் துள்ளுவதுபோலும்விழிகளோடும்
 விமலகாமேசியருள்புரிந்துகருணையோடும்— சிதமதி

விருத்தம்

உத்தமஜீவஸாக்ஷிசித்தொடுமுறைதற்சூற்ற
 உடம்புபோற்றுவாதியெனும் வெளிக்கோட்டையோ
தத்துவம்மற்றுஞ்சுற்றித்தழைந்தவாவரணங்கொண்டும் [டும்
 ஸகலசைதன்யரூபசத்திகள்பலவுஞ்சூழச்

சித்தமுங்கடந்தான்மாரத்திரையையுந்தாண்டிமோன
சின்மயமானசிந்தாமணிமண்டபத்தினுள்ளே
நித்தியசித்துருபியானந்தமஞ்சமீதில்
நிமலகாமேசனங்கத்தமர்ந்தவாறென்பதாமே.

கீர்த்தனம். இராகம்—கமாசி. தாளம்—ஆதி

பல்லவி

எந்தாயிருந்தருள்வா ளுலகெலா மீன்றுள்சிவனுடனே.

அநுபல்லவி

சிந்தாமணிமன்றுள் செந்தாமரைப்பிந்து
சுந்தரப்பீடத்திலேந்துபேர்மஞ்சத்துள்— எந்தாய்

சரணங்கள்

செம்பவளங்கொடிபோன்ற வுடம்போடுஞ்
செம்பொற்சிலைபோலிலங்கும்வடிவோடும்
அன்புள்ளவர்களறியும்முகமோடும்
அன்பிலார்காணுதமாயைத் திரையோடும்
அந்தரங்கமிருந்துமோகன சுந்தரம்பெறுமந்தகாசமோ.
டெந்தையங்கமுறைந்து சிற்சுகவிந்தைசெய்தருள்மந்திரத்
திரு—எந்தாய்

மந்திரசித்திகள் வாழ்த்தும்புகழோடும்
வந்துதாராதேவி வீசும்மணமோடும்
சந்திரசூரியர் தாங்குங்கலையோடும்
சந்ததமானந்தந்தங்கும்நிலையோடும்
தங்கமாமணியங்கமெங்கு மிலங்குசோதிவிளங்குநாலு
கரங்களோடுதுலங்குசங்கரனங்கமேவியுமங்களந்தரு—எந்தாய்

விருத்தம்

தேவிகாமேசியம்மை திருவிருவெல்லாஞ்சிந்தித்
தேவர்காண்மொழியவல்லா ரெண்ணருஞ்சோதியாகி
யாவுலகீன்றளிக்கு மன்னையானந்தரூபி
பாவனை செய்வர்பாவம் பறந்திடுந்தவத்தின்மிக்கோய்.

கீர்த்தனம். இராகம்—ஸவுராஷ்டம்: தாளம்-ஆதி.

பல்லவி

ஆராற்சொல்லக்கூடும் இந்த
அருவரூபிசொரூபமெல்லாம்-

அனுபல்லவி

பேராயிரம்பெற்றிலங்கும்
பெருமைகொண்டகருணை வடிவம்- ஆராற்

சரணம்

தேவதருவைத்தூவல்களாக்கித்
திரைகடலேழும்மஷிகளாக்கிப்
பூவாணிமுதலோர்கள்புகழ்த்திப்
பூமியைப்பத்திரமாக நேமமொடுநீள்காலம்
போதமுற்றெழுதினுலும்
நாதைரூபமுற்றுருது— ஆராற்

விருத்தம்

ஸ்ரீவித்யாரூபியான சின்மயிபாதந்தன்னிற்
பூவிறைத்தன்புசெய்து புனிதமந்தரஞ்சபிப்போர்க்
காவத்துவாராதாவியருஞ் செல்வமோடுந்தாயைச்
சேவித்துப்புவியிற்போக சித்திமுத்தியையுஞ்சேர்வார்:

கீர்த்தனம். இராகம்—மோகனம்: தாளம்—ரூபகம்;

பல்லவி

ஸ்ரீவித்யாரூபியைபூசைசெய்வர் க்குப்-
பாவங்களேது வினைப்பவமேது- ஸ்ரீவித்யா

அனுபல்லவி

ஸத்யம்முனியேயான்சொல்வதுப
சாரமொழியல்லாஸாரதிஸாராம்- ஸ்ரீவித்யா

சரணங்கள்

புகழும்பாக்யம்யோக்யம்வாக்கிற்
பொருந்தும்வித்தையுந்திருந்தும்புந்தியும்

திகழும்போகம்யோகம்முதலாய்ச்
சிறந்தசித்தியுந்நிறைந்தவருள்செய்
துகந்துமெங்களும்வ்யாபித் துறைந்தமந்திரரூபி
மகிழ்ந்துசிவனோடுமேவி மலர்த்தமலரடிபூவிட்
டகந்தெளிந்துபத்துமஞ்சுமட்சரங்கள்லக்ஷமோதி- ஸ்ரீவித்யா

மதத்துவமுள்ளமந்திரம்நான்கு
மறைகளுமுண்மையாகச்சொன்னது
இகத்திற்போகம்பரத்தினில்முத்தி
யெதுவுந்தந்திடும்படர்வினையாவும்

அகற்றிடும்பொருளெல்லாமளித்திடும்மிகுநல்லார்
புகழ்த்திடுஞ்சிவையல்லாற் புரப்பதற்கிடமில்லால்
மகத்வமீதுகேட்டபேரும்மங்களசுகம்பெறுவர்— ஸ்ரீவித்யா

விருத்தம்

பதினாறுபுரத்திவ்வாறுபர தேவிவாஸஞ்செய்து
பதினாலுபுவனம்பாலித்தருள்வதாற்பத்தியோடும்
விதிபோலபூசைசெய்தும் விமலமந்தரஞ்சபித்தும்
விண்ணவர்முனிவரெல்லாம்மேவினார்சித்திமுத்தி
இதுவேகாண்பாவமநீங்கியிகபரஞ்சேருமின்பம்
என்றயவதனயோகியென்றகஸ்தியர்க்கியமபிக்
கதிசேரும்படி காமேசிமந்திரமபூசைமற்றும
கருணையாயுபதேசித்துக்காமாக்ஷிப்புகழ்ந்தார்

கீர்த்தனம். இராகம்—கமாசி. தாளம்—ஆதி.

பல்லவி

தாயேகதிநீயெகிருபை தந்தருள்செய்குவாயே.

அநுபல்லவி

மாயா மயீமகாதேவி மதனந்தகன்மனோமோகினி
ஆயுமபிறையணியுஞ்சது ராரணிபூரணி காரணி—நாரணி-தாயே

சரணங்கள்

அனைத்துலகமும்படைத்தாதரித்தருளும்பராசக்தி
யகிலபாக்ய முமுதவுங்கடாக்ஷலோசனவாரிசத்தி
இளித்ததேன்மொழியுடனரன்மார்புக்கிசைந்தரும்பகுசத்தி
ஈரேழுலகமும்புகழ்ந்திடுபரமீசுவரீ பாசாங்குசத்திமகேசத்தி — தா.

பண்டாசுரன்முதலாகியபலதானவசமனீ
பானுகோடிபோல விளங்குஞ்சக்றராஜகமனீ
வண்டாடியகுல மாடவிவளர் ஸ்ரீபுரவாசினீ
மாயன்சோதரீவாமலோசனிவாரண கமனிமகிஷமர்த்தனி- தாயே

அன்பர்க்கருளும்பெருங்கடலானதயாம்பிகையே
அரனுடற்பாதிமருவியுலகையாளுஞ்சகநாயகியே
சம்புமோகினிசாம்பவீசங் கரியிந்துமுகியே
சண்டிகே ஸ்ரீ நீலகண்டர்மனைவியேசக்திபுக்திபக்திமுக்திதாயகியே—
தாயே

விருத்தம்

மூவர்களையீன்றுநள் செய் மூலமுதலானசிவ
மோகினியெனப் புகழ்ந்து
மூவுலகுபணிகின்ற ஸ்ரீலலிதைசரிதையீது
முற்றுமன்போடுகேட்போர்
பூவுலகிலுள்ளசுக போகமெதுமுண்டுபரி
பூரணிபதஞ்சேருவார்
தேவிதிருமகிமைபடனஞ் செயிற்றீங்ககன்
றன்னகர் சிறப்படையுமே.

---

ஸ்ரீலலிதாம்பாள் கும்மி

ஸ்ரீபெருகும் ஸ்ரீபுரத்தருளும் சிவ-
சின்மயிசுந்தரியைப் பாடுதற்குக்
கார்மருவுங்கண்டன்மைந்தன் கணபதி
கந்தன்ஸரஸ்வதி காப்பாமே
நீர்மருவும்வேணியனும்நீலவிழித்தாயுமமஞ்
சோர்வறநின்றருளவும்யான் சொல்வதினைக் கேட்டிந்தக்

கும்மியைப்பாடித்துதியுங்கோடி ஜக
தம்மையைப்போற்றிப்பணியுங்கோடி
வீத்துள்ளடங்குந்தருப்போலே கல்லில்
மேவியுறையுங்கனற்போலே
சத்திஷெம்வெளிவந்துவிளையாடுந்
தன்மையைச்சொல்கின்ற வேதமெல்லாம்
பத்திசெயுஞ்சத்திபதம்புத்திபுரிந்திடுவர்பதம்
எத்தனமுந்தொழுதுமொழிந்திடுவதினைக் கேட்டிந்தக்
கும்மியைப்பாடித்துதியுங்கோடி ஜக
தம்மையைப்போற்றிப்பணியுங்கோடி
தையல்காணிங்கணடம்புரியு மிந்த
சத்தியும்புத்தியுஞ்சித்திகளும்
வையகம்வாழும்வரிசைகளு மந்த
மாயாவிலாஸினி தன்னருளாம்
ஐயமகன்றம்மையடிக்கன்புபெறின்பாவமெலாம்
நையுமடி நாமளெலாம்நாடரசியாவமடி
கும்மியைப்பாடித்துதியுங்கோடி ஜக
தம்மையைப்போற்றிப்பணியுங்கோடி
வாருங்கோடி பெண்காள்வாருங்கோடி ஞான
வாரியமதண்போம்வாருங்கோடி
ஆருமறியாவதிசயமாகிய வம்புயாடவிநடுவிலகுஞ்
சீர்மணியைச்சின்மயியைச் சிற்பரயைத்தற்பரனோ
டோர்கனியையுட்டனியை
உள்ளதுவாமுண்மையினைக்
கும்மியைப்பாடித்துதியுங்கோடி ஜக
தம்மையைப்போற்றிப்பணியுங்கோடி.

## வேறு

காண்பதற்கருந்திநன்முயிரு
கைகொட்டிக்கும்மியடிப்பமடி
சாண்வயிற்றைறக்கருதியிங்கேதுள்ளிச்
சாடும்பேயையொழிப்பமடி
சாகாமலேநோகாமலேபோ காதிகைமேலாகுமே- கும்மியை

தேவிதிருவருள்பெற்றுக்காற் செய்யுந்
தீவினையேதுபலமேது
யாவுந்தன்னருளாகுமடி பர
மானந்தமொன்றேதழைக்குமடி
ஆரறிவாரன்புநெறியாரறிவாரென்றறிவால- கும்மியை
ஒன்றின்செயலாகிக்காணுமடியந்த
வொன்றென்பதெந்தாயொருத்தியடி
நன்றுணர்வார்மனநாட்டமடியகை
நம்பாதநாள்கள் தின்டாட்டமடி
நாடாதவர் தேடாதமெய் வீடாயருள்சூடாமணி கும்மியை
அம்மையைபோற்றுவோம்நாமனெல்லாம்நிஜ
வன்புநதியினில்நீராடிச்
செம்மைவைராக்கியச்சிந்தூரப்பொட்டிட்டு
தேசிகன்சொல்மைகண்கட்கெழுதிச்
சிந்தாமணிசொந்தாபரணந்தாலியணிந்தாள்பதம் கும்மியை

## வேறு

கால்களோராயிரங்கொண்டமன்றுட்பஞ்ச
கர்த்தர்களாகியமஞ்சமதிற்
பாலின்மொழிசிவகாமேசிவாழ்வதைப்
பார்த்துக்கும்மியடிப்பமடி-பதம்
போற்றிக்கும்மியடிப்பமடி
பண்பாயின்பாய் நண்பாயன்பாய்
மங்களங்கும்மியைப்பாடுங்கோடி உங்கள்
கங்கணக்கைகொட்டியாடுங்கோடி
பண்டுமகேசனெரிவிழியாற்
பஞ்சபாணன் பட்ட வெண்பொடியிற்-
பண்டாசுரனைன்றோர் பாவியுண்டாய்ப் பெரும்
பாடுபடுத்தினன் றேவர்களை
பதிவிண்டுதைகொண்டிதயம்பதறுய் மங்கள
வாடித்தளர்ந்து செல்வமிழந்து
வானவர்துன்பந்தொலையாமல்

நாடிக்கரை ந்தவர் நாடோறும்பின்பு
நாரதர்சொற்படி நண்ணியவர்
நலிவாய்மெலிவாய்த்தளர் வாமுனமோ
டாதிபராபரையைப்போற்றி யவ
ரங்கமறுத்தெரியிட்டபோது
ஜோதிலளிதையாய்த்தோன்றியவரர்கள்
துன்பமொழியவரமருளித்
துணையாயயனுற்பணிசெய்திணைசேர்
காமனைவென்றவர் காமேசனுய்வந்து
கல்யாணஞ்செய்துமனமகிழ்ந்து
காமாட்சிகாமேசரென்னவும்பேருற்றுக்
காக்குங்கருணை மகாராஜியாய்த் தொழு
வோர்க்கெதும்நல்கும் பரஞ்சோதியாய்க்
கருணாகரிசங்கரிசுந்தரியாள்
தங்கதையைக்கும்மிபாடுங்கோடி உங்கள்
கொங்கைகுலுங்கக்கூத்தாடுங்கோடி.

வேறு

சித்துவிலாஸத்திருவருளால்வீர
சத்திபலகோடிரூபமொடுஞ்
சென்றனன்போர் க்குப்படையொடு
நின்றனன்நேர்க்கு எதிரிட்ட
நீசர்களை நாசஞ்சைய்நு தாஸர்களாய்நேசம்பெறும்
தேவரை க்காத்தகருணாகரிபதஞ்
சிந்தித்துக்கும்மியடியடியுங்கட
தீவினைவாடும் பாவங்கள்
சிதறியேஓடும் பிணிகளும்
தீண்டாதருளாண்டாள் பதஞ்சித்திநிடும்முத்திபொருள்
ஆகியஸ்ரீபுரநாயகியாம்பர
மானந்தரூபியருளைப்பெற்றுள்
ஆதாரங்காணு மப்பாலுற்ற
வருள்வெளிதோறும் நிறைவான
அண்டங்களும்பிண்டங்களு மாளவின்றியேவிளையேடும்

எந்தாய்திருச்சன்னிதானமடி அங்கே
யெல்லார்க்கும்போகமுடியாதடி எண்ணிலாசத்திகாவலோடுந்
திண்ணமாய்ச்சுற்றி வளைந்துகண்
ணெட்டாதுயர்கோட்டைகளுமெங்கங்கணுமங்குண்டடி
இத்தையுணர்ந்துள்ளேபாருங்கோடி ஸ்ரீ
வித்தையைப்பாடிக்கொண்டாடுங்கோடி.

வேறு

கோதுற்றகாமக்றோதாதிகளாகிய
கோட்டைகள் தாண்டிக்குதியுங்கடி
தீதற்றசெல்வஸ்ரீ காமேசர்வாழ்கின்ற
சிந்தாமணிக்ரகங்காணுமடி
கொந்தலர்வாடைகள்வீசிவரக்
குளிர்ந்தமதியினமுதொழுகச்
செந்தாமரையன்னம்போனடந்து
சின்மயிமண்டபம்போயணைந்து
கொகிலம்போலே கும்மிபாடியிரு
கொங்கைகுலுங்கக் குதித்தாடி
போகமும் யோகமுஞ்சித்தியும் முத்தியும்
போற்றிவளைந்தசபைநடுவே
சிங்காரரூபிமகா தேவி ஸ்ரீ நீலகண்டனொடுமேவி
மங்களமாய்வாழும்மண்டபத்தில்
மகிழ்ந்துகும்மியடிப்பமடி பவந்-
தணிந்துகும்மியடிப்பமடி

சோபனம் இராகம் – மத்யமாவதி தாளம்—சாய்ப்பு

சேபானம்சோபனம் நித்யாசுபசோபனம் சோபனம்
சோபனங்காமேசி காமேசரிருவர்க்கும்
சோபனம்சாமளா தேவிவாராகிக்கும்
சோபனஞ்சின்மய சத்திகளனைவர்க்கும்
சோபனந்தேவர்க்கும் மூவர்க்கும்யாவர்க்கும் — சோபனம்

அன்பர்க்கும்முனிவர்க்கு மந்தணர்யாவர்க்கும்
அரசர்க்கும்மற்றயிரு வருணர்க்குமிக்கதையை

நம்பிக்கேட்பவர்க்கும் நம்பாமற்கேட்பவர்க்கும்
நாடிப்படிப்பவர்க்கும் நால்வகைமாதர்கட்கும்— சோபனம்

ஞானமறைநூல்கட்கும்நற்பொருளுணர்ந்தாற்கும்
ஞாயந்துலக்குவர்க்கும் ஞான ம்விளக்குவர்க்கும்
கானகவிவாணர்க்கும் கருணையுடையவர்கட்கும்
கன்மதன்மஞ்செய்வோர்க்கும் களங்கமில்லாதவர்க்கும்—சோபனம்

ஆலமுண்டகிலமுங்காக்கும்பரமன்பாதம்
அன்புடையார்க்குதவியாகிச்சிறந்தவர்க்கும்
நீலகண்டதாஸஆன்சொல்லெளிதா சுதையிதற்கும்
நீனிலவன்புற்றிதனைப்படிப்போர்க்குங்கேட்போர்க்கும்—சோபனம்

விருத்தம்

ஆதிநாரணனேமுற்று மய்க்ரீவனுகத்தோன்ற
யகஸ்தியமா முனிவர்க்கன்பாயதிகவிஸ்தாரமாக
ஒதியகதையிதென்றே யுகந்துவியாஸரும்முன்சொன்ன
ஷண்மையைத்தெரிந்தமட்டு மோதினேனுதலெல்லாம்
வேதநூலுணர்ந்தவல்லோர் நல்லோர்மற்றெவருங்கேட்டு
வெண்மதிவேணிமுக்கண் விமலனுேடிலங்குஞான
சோதியின் கதையெவர்க்கு மெளிதுணர்வித்ததாகச்
சொந்தமாய்க்கொள்வர்நீல கண்டதாஸன்சொல்லென்றே

வாழி விருத்தம்

சீர்மிகும்ஸ்ரீபுரத்திற் சிறந்தருள்சிவகாமேசா
செல்வீகாமேசிவாழி சின்மயானந்தம்வாழி
பார்மிசைபரையினுண்மை பகருமிச்சரிதம்வாழி
பலருமீதுணருமாறு பணித்தமாமுனிவோர்வாழி
எர்வையன்புற்றுரைப்போ ரிசைந்தறிவோடுங்கேட்போர்
எவருமின்பாகவாழி பிணையடித்தொண்டர்வாழி
கார்பயிர்வாழிநாளுங் காவலர்செங்கோல்வாழி
கதையிதுபாடுந்தேசம் களிப்புறவாழிவாழி.

முற்றுப்பெற்றது

ஸ்ரீ அய்யப்பா களர் பிரின்டேர்ஸ் ஆற்றுகால், மணக்காடு, திரு - 9.